| பதம். | உரை. |
|---|---|
| சொன்னார் | வாய்வந்தபடி சொல்லவல்லவர்கள் |
| சொல்லி | நவநீத சௌர்யத்தை வெளிப்படையாகச்சொல்லி |
| நகும் | பரிஹஸியாநின்ற |
| பரிசே | ப்ரகாரமும் (மதிக்கவற்றோ? என்று பழிக்கஞ்சாதே) |
| தோயா | நன்றாகத்தோயாதே |
| இன்தயிர் | மதுரமான தயிரையும் |
| நெய் | நெய்யையும் |
| அமுதுண்ண | அமுது செய்யாநிற்க (அப்பொழுது) |
| பெற்றதாயால் | பெற்றதாய்போல் ப்ரியகரையான யசோதையினால் |
| ஆப்புண்டு | கட்டுண்டு |
| இருந்து | போகமாட்டாதே நின்று |
| அழுத | அழுது (அதிலும்) |

| பதம். | உரை. |
|---|---|
| எங்கும் | வாய்விடமாட்டாதே விக்கிவிக்கி அழாநின்ற |
| தாடாளா | பெரியோனே! |
| தரையோர்க்கும் | பூமியிலுள்ளார்க்கும் |
| விண்ணோர்க்கும் | மேலுலகத்திலுள்ளார்க்கும் |
| சேயாய் | கிட்டவரியனே |
| முன் | முன்னமே |
| கிரேததிரேதத்துவாபரகலியுகம் | க்ருதயுகம் த்ரேதாயுகம் த்வாபரயுகம் கலியுகம் என்று சொல்லப்படுகிற |
| இவைநான்கும் ஆனாய் | இந்நாலு யுகங்களுக்கும் நிர்வாஹகனானவனே! |
| ஆயா | இடையனான க்ருஷ்ணனே! |

அழுந்தூர் மேல் திசைநின்ற அம்மானே.
நின்அடியன்றி மற்று அறியேன். (௪)

வ்யா — ஆறும்பாட்டு. (தோயாவின்தயிரித்யாதி) அறத் தோயாத இனிய தயிரையும், நெய்யையும் பொருந்தி அமுதுசெய்ய. (சொன்னாரித்யாதி) வாய்க்குப் போந்தார் போந்தபடி சொல்லுகிற பழிக்கஞ்சாதே, "மழலைத்தயிரும் நெய்யும் புஜித்தோமாகில், இதுக்கு வருவதொன்றுண்டோ?" என்றும், "ஒன்றையிட்டுப்பழிசொல்லுகிறார்களன்றே" என்றும் நாட்டார் சொல்லுகிற பழிக்கு லஜ்ஜியாதே இருந்தாயைத்து. (பெற்றதாயாலாப்புண்டு) யசோதைப் பிராட்டியாலே கட்டுண்டு. (அழுதா)ப்ரதிக்ரியை அற்றுப் போகமாட்டாதே நின்ற வேண்டப்பாட்டை யுடையவனே.

(தரையோர்)பூம்யந்தரிக்ஷங்களிலுள்ளார் ஸ்வயத்நத்தாலேகாணப்பார்க்குமன்று அவர்களுக்கு தூரஸ்தனானவனே! நீரிங்ஙனேபதறுகிறதென்? காலம்வந்து கார்யம செய்பவேண்டாவோவென்ன; (கிரே

[நி]ரோத) (க) "[Sanskrit] -கலௌ க்ருதயுகம் தஸ்ய" என்[று]
[ச]ொண்ணுமோ உனக்கு, காலம் நீ இட்டவழக்கன்றோ? உன் திரு
[வ]டிகளையொழிய வேறொன்றை யறியேன். (அழுந்தூர்மேல்) அந்த
[க்]ருஷ்ணவதாரத்தில் பிற்பாடர்க்கும் இழவாமைக்கன்றோ நீ இங்கு
[வ]ந்து நிற்கிறது. ... ... ... ... ... ... (௬)

அநு.—ஆரும்பாட்டு. (தோயாவித்யாதி) கீழ்ப்பாட்டிலே, "கலியுகத்
[த]ன் தன்மையறிந்தேன்" என்னுகின்றீர், உமக்குறுப்பாக, இனி கலியுக
[த்]தை அழிக்கச் சொல்லுகிறீரோவென்ன அருளிச் செய்கிறுரென்று
[ச]ங்கதி.

† கலியுகத்தை உண்டாக்கமாட்டாயோ என்று கருத்து. [சொன்னூர்
[ச]ொல்லி நகும்பரிசே தோயா வின்தயிர் நெய்யமுதுண்ண பெற்ற தாயா
[ர]ப்புண்டு] என்றந்வயமாய் தாத்பர்யமருளிச்செய்கிறுர் (மழலையித்யாதி).
[த]ரையோர்" என்கிற விடத்தில் "[Grantha]" என்கிற சப்தம் "தரை" என்[று]
[ப]் பூமியைச் சொல்லுகிறதென்று அருளிச்செய்கிறுர் (பூம்யந்தரிக்ஷேத்
[யா]தி). ... ... ... ... ... ... ... (௬)

[௭].—கறுத்துக் கஞ்சனை யஞ்ச முனிந்தாய்
கார்வண்ணு கடல்போலொளிவண்ணு
இறுத்திட்டான் விடையேழும் முன் வென்றாய்
எந்தாயந்தர மேழுமுண்ணுய்
பொறுத்துக்கொண்டிருந்தால் பொறுக்கொணுப்
போகமே நுகர்வான் புகுந்தைவர்
அறுத்துத்தின்றிடவஞ்சி நின்னடைந்தேன்
அழுந்தூர்மேற்றிசை நின்ற வம்மானே. ... (௭)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| [க]ஞ்சனை | கம்ஸனை | ஒளி | நீலமான காந்தியையும் |
| [கறு]த்து | கோபித்து | வண்ணு | ரக்ஷகத்வஸ்வபா(வ) வத்தையு முடைய வனே! |
| [அ]ஞ்ச | அவன் பயப்படும்படி | | |
| [மு]னிந்தாய் | (அவனை நிரஸித்தரு ளினவனே! | | |
| [கா]ர்வண்ணு | மேகம்போல் குளிர்ந்த வடிவையுடைய வனே! | விடை | பலிஷ்டமான [யும் |
| | | ஆன் ஏழும் | ஏழு வ்ருஷபங்களை |
| | | முன் | க்ருஷ்ணவதாரத்தில் |
| [கட]ல்போல் | ஸமுத்ரம் போன்ற | இறுத்திட்டு | (உடலை) முறித்து |

(க) விஷ்ணுதர்ம-௯0௯-௯௭. † "கலியுகத்தில் க்ருதயுகத்தை உண்
[டா]க்கமாட்டாயோ" என்று இருக்கலாம்.

| | | | |
|---|---|---|---|
| வென்றாய் | (கொன்று) ஜயித்தவனே! | பொறுக்கொணு | ஸஹிக்கப்போகாமல் [யே |
| எந்தாய் | என்ஸ்வாமியே! [ரும் | போகமே | விஷயபோகங்களை |
| அந்தரம்ஏழும் | மேலுலகங்களேழுக் | நுகர்வான் | அநுபவிப்பிக்கைக்காக |
| முன் | ஆதிகாலம் தொடங்கி | | |
| ஆனாய் | நிர்வாஹகனானவனே! | புகுந்து | என்னுள்ப்ரவேசித்து |
| | அழுந்தூர் மேல் திசைநின்ற அம்மானே, | அறுத்து | பாதி(ஃபாதி)த்து |
| ஐவர் | பஞ்சேந்த்ரியங்களும் (பண்ணும்) | தின்றிட | (ஸ்வரூபத்தை) அழியப் பண்ணா நிற்க |
| பொறுத்துக் கொண்டிருந்தால் | (உபத்ரவங்களை) ஸஹித்துக்கொண்டிருக்கப்பார்த்தாலும் | அஞ்சி | (அதற்கு) பயந்து |
| | | நின் | அடைந்தேன். (எ) |

வ்யா.—ஏழாம்பாட்டு. (கறுத்துக்கஞ்சனை) எல்லாரும் ரக்ஷை பெற்று ஜீவிக்கவேணு மென்றிருக்கிற இவன் பக்கலிலே துரபிஸந்தியைப் பண்ணினானைத்து கம்ஸன்; அவன்பண்ணின அபிஸந்தி அவன்றன்னோடே போம்படிகோபித்து, கம்ஸனானவன் பீ(பீ)தனா படி முனிந்தாய், சீறினாய். (கார்வண்ணா) கண்டார்க்கு ஶ்ரமஹரமானவடிவையுடையவனே. (கடல்போலொளிவண்ணா)கடல்போலே ஸர்வபதார்த்தங்களுக்கும் ரக்ஷகனுமாய் அத்தோடொத்த நிறத்தையுடையவனே! (இறுத்திட்டான் விடையேழு முன்வென்றாய்) அஸுராவேசத்தாலே ம்ருத்யுபோலே வந்த ருஷபங்களேழினுடைய கொம்பையும் முறித்து அவற்றை ஜயித்தாய் (எந்தாய்) அச்செயலைக்காட்டி என்னை எழுதிக்கொண்டாய். (அந்தரமேழு முனாய்) உபரிதனலோகங்களேழையு முடையனானவனே.

(பொறுத்துக்கொண்டிருந்தால்) இவற்றால்வந்த நலிவை ஆற்றியிருப்போமென்றால் ஆற்றவொண்ணாதபடியாக போக(ஃபோக)ங்களைப் புஜிக்கவேணுமென்று ஐவர்நெருக்கி புஜிப்பிக்க, அவர்களுக்கஞ்சி உன் திருவடிகளிலே சரணம் புகுந்தேன். ... ... (எ)

---

அரு.—ஏழாம்பாட்டு. (கறுத்தித்யாதி) காலம் நீ இட்டவழக்கன்றோ என்று, உம்மைப்பெரிய இதயுகத்தின்படியே என்னையே நினைந்து உகக்கப் பண்ணச் சொல்லா நின்றீர், இதுக்கு நான் செய்யவேண்டுவதென், இந்த்ரியங்களை விஷயங்களில் நின்றும் மீட்டு, என்னையே நீர்உகக்கலாகாதோ; வென்ன ; அவை என்னால் அடக்கவரிது, உன்னாலடக்கவேணு மென்கிறாரென்று ஸங்கதி.

ஒளியையும் வண்ணத்தையுமுடையவனே) என்றவற்றை வ்யுத்க்ரமேண
அருளிச்செய்கிறார் (கடல்போலேயித்யாதி). ... ... ... (எ)

மூ: — நெடியானே கடியார்கலி நம்பீ
நின்னையே நினைந்திங்கிருப்பேனைக்
கடியார் காளையரைவர் புகுந்து
காவல் செய்தவக்காவலைப் பிழைத்துக்
குடிபோந்துன்னடிக்கீழ் வந்து புகுந்தேன்
கூறைசோறிவை தந்தெனக்கருளி
அடியேனைப்பணியாண்டு கொளெந்தாய்
அழுந்தூர் மேல்திசைநின்ற வம்மானே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நெடியானே | ஸர்வாதிகனே! | அக்காவலை | அந்தகடினமானசிறையை |
| கடி | (பூமிக்கு) அரணுகச் சமைந்திருக்கிற | பிழைத்து | தப்பி வந்து, [மே |
| ஆர் கலி | ஸமுத்ரத்தில் (கண் வளர்ந்தருளுகிற) | உன் அடிக்கீழ் | உன்திருவடிகளின் கீ |
| நம்பி | பூர்ணனே! | குடிபோந்து | குடியிருக்கக்கருதி |
| எந்தாய் | என்ஸ்வாமியே! | வந்து | கிட்டி |
| அழுந்தூர்மேல் திசை நின்ற அம்மானே! | | புகுந்தேன் | அந்தர்ப்பவித்தேன், |
| நின்னையே | உன்னையே | எனக்கு | (விஷயாந்தரங்களைவிட்டுவந்த) எனக்கு |
| நினைந்து | த்யாநித்துக்கொண்டு | கூறை | வஸ்த்ரமும் |
| இங்கு | இந்தலீலா விபூதியில் | சோறு | அந்நமுமாயுள்ள [களை |
| இருப்பேனை | இருக்கிற என்னை, | இவை | இந்த உன் திருவடி |
| கடி ஆர் | பலத்தையுடைத்தாய் | அருளி | க்ருபைபண்ணி |
| காளையர் | (பரபீடநத்தில் பின்வாங்காத) இளம்பருவத்தை யுடையதான | தந்து | கொடுத்து, |
| ஐவர் | பஞ்சேந்த்ரியங்களும் | அடியேனை | ஸ்வதஸ்ஸித்தமான தாஸ்யத்தையுடைய என்னை |
| புகுந்து | என்னுள்ப்ரவேசித்து | பணி ஆண்டு கொள் | நித்ய கைங்கர்யத்தை பண்ணு வித்துக் கொண்டருளவேணும். (அ) |
| காவல்செய்த | (என்னை உன்னிடத்தில் போகாதபடி) சிறைவைத்த | | |

வ்யா. — எட்டாம்பாட்டு. (நெடியானே) ஸர்வாதிகனான ஸர்வேஶ்வரனே. (கடியார் கலிநம்பி) பரிமளத்தை யுடைத்தாய், அரண்

பெற்றிருக்கிற, ஆர்கலியுண்டு - கடல், அதிலே சாய்ந்தருளின கல்யாணகுண பரிபூர்ணனே. (நின்னையே நினைந்திங்கிருப்பேனை) பரமபதத்திலேயிருந்து, அங்குள்ளார் நினைக்கும் நினைவை இங்கேயிருந்து உன்னையே நினைந்திருக்கிற என்னை, நெஞ்சில் நன்மையின்றிக்கே பிறரை நலியநலிய இளகிப்பதியாநின்ற பருவத்தையுடைய ஐவர் வந்துபுகுந்து சிறைசெய்கிற. (அக்காவலைப் பிழைத்துக் குடிபோந்துன்னடிக்கீழ் வந்து புகுந்தேன்) (௧) "𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌂𑌶𑍍𑌚 𑌦𑌾𑌰𑌾𑌂𑌶𑍍𑌚 𑌰𑌾𑌘𑌵𑌂 𑌶𑌰𑌣𑌂 𑌗𑌤𑌃 -த்யக்த்வா புத்ராம்ஶ்ச தாராம்ஶ்ச ராகவம் சரணங்கத:" என்கிறபடியே, அவற்றைத்தப்பி உன் திருவடிகளிலே சரணம் புகுந்தேன்.

(கூறைசோறிவைதந்தெனக்கருளி) எனக்குக் கூறையும் சோறுமாயிருக்கிற இத்திருவடிகளைத் தந்தருளி. (௨) "தோட்டமில்லவள்" என்கிறபடியேயும், (௩) "எல்லாங்கண்ணன்" என்றும் சொல்லுகிறபடியே கூறைசோறாக நினைத்திருப்பது இவையாய்த்து இவர். (அடியேனைப் பணியாண்டு கொளெந்தாய்) வகுத்த ஸ்வாமியான நீ ராஜபுத்ரனாய்ப் பிறந்து முடியிழந்து போவாரைப்போலேயாகாமே அடியேனாயிருக்கிற என்னை நித்யகைங்கர்யத்தைக் கொண்டருளவேணும். (அழுந்தூரித்யாதி) ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு வந்து புகுரலாம்படி கடற்கரை வெளியிலே வந்து நின்றாப்போலே, எனக்கு உறவுமுறையார் கைவிட்டவன்று வந்து கிட்டலாம்படியன்றோ தேவரீர் இங்கே வந்து நிற்கிறது. ... ... ... ... ... (௮)

---

அரு.—எட்டாம்பாட்டு. (நெடியானே இத்யாதி) கீழ்ப்பாட்டில், "பொறுத்துக்கொண்டிருந்தால் பொறுக்கொணாப்போகமே நுகர்வான்" என்று அதுக்கஞ்சினேனென்றீர், "லோகத்திலே மஹாயோகிகளுமித்தனை அஞ்சினாரைக்கண்டதில்லையே, சரகாகிலும் நின்று நினைத்தன்றோ இருப்பது; ஆகையாலே அவர்ஜ்ஜநீயமான அவற்றுக்குச் செய்துகொண்டு ஆறியிரும்" என்று எம்பெருமானுக்குக் கருத்தாக அருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

"கடி" என்று பரிமளமும், காடி(கு)ந்யமும். அந்வயக்ரமேணவருளிச் செய்கிறார் (பரிமளத்தை இத்யாதி).

"இவை" என்றதினர்த்தம் (இத்திருவடிகளை) என்றபடி ... (௮)

---

(௧) ரா-யு-௧௭-௧௬. (௨) பெரி-திரு-௫-௧-௫. (௩) தி-வாய்-௬-௭-௧

மூ.— கோவாயைவரென்மெய் குடியேறிக்
கூறைசோறிவைதாவென்று குமைத்துப்
போவார் நானவரைப் பொறுக்ககிலேன்
புனிதா புட்கொடியாய் நெடுமாலே
தீவாய் நாகணையில் துயில்வானே
திருமாலே இனிச் செய்வதொன்றறியேன்
ஆவாவென்றடியேற் கிறையிரங்காய்
அழுந்தூர் மேல் திசைநின்ற வம்மானே. (கூ)

| பதம். | உரை. |
|---|---|
| புனிதா | பரிசுத்தனே ! |
| புட்கொடியாய் | பெரியதிருவடியை த்வஜமாக வுடையவனே ! |
| நெடுமாலே | (ஆஶ்ரிதரிடத்தில்) அத்யந்த வ்யாமோஹமுடையவனே ! |
| தீ வாய் | அனலையுமிழாநின்ற வாயையுடைய |
| நாகு அணையில் | திருவநந்தாழ்வானாகிற படுக்கையில் |
| துயில்வானே | கண்வளர்ந்தருளுமவனே ! |
| திருமாலே | ஶ்ரியஃபதியே ! |
| அழுந்தூர் மேல் திசைநின்ற அம்மானே ! | |
| ஐவர் | பஞ்சேந்த்ரியங்களும் |
| கோவாய் | (எனக்கு) நிர்வாஹகங்களாய்க் கொண்டு (என்னை அடிமை கொண்டு) |
| என்மெய் | என்சரீரத்தில் |
| குடியேறி | குடியாக ஏறிவந்து |
| இவை | இந்த ஹேயங்களான |

| பதம். | உரை. |
|---|---|
| கூறை | வஸ்த்ரத்தையும் |
| சோறு | அந்நத்தையும் |
| தா என்று | கொடு என்று |
| குமைத்து | (என்னை) அடர்ந்துக் கொண்டிருந்து |
| போகார் | இங்குநின்றும் போகின்றனவில்லை. |
| நான் | உனக்கடியேனான நான், |
| அவரை | அவ்விந்த்ரியங்க(ள் செய்யும் உபத்ரவங்க)ளை |
| பொறுக்ககிலேன் | ஸஹிக்கமாட்டுகிறிலேன் ; |
| இனி | உன்னையே புகலாக அடைந்தபின்பு |
| செய்வது | என் ஹிதத்துக்காகச் செய்ய வேண்டிய |
| ஒன்று | (மற்று) ஒரு க்ருத்யத்தையும் [யால்) |
| அறியேன் | அறிகிலேன், (ஆகை |
| அடியேற்கு | என்விஷயத்தில் |
| ஆ ஆ என்று | ஐயோ ஐயோ என்று |
| இறை | சிறிது |
| இரங்காய் | க்ருபைபண்ணியருள். |

வ்யா. —ஒன்பதாம்பாட்டு. (கோவாயித்யாதி) நீ சேஷியாமது தவிர்ந்து, இவை எனக்கு நியாமகமாய்க்கொண்டுவந்து என் சரீரத்

திலே குடிபுகுந்தது. (கூறைசோறிவை) நான் கூறையும் சோறுமாக நினைத்திருக்குமவையொழிய வேறே சிலவற்றைத்தாவென்று என்னை நெருக்கி ஒருக்ஷணமும் கால்வாங்குகிறிலர்கள்; நான் அவர்களுடைய நலிவைப்பொறுக்கமாட்டுகிறிலேன். (புனிதா) என்விரோதியைப்போக்கி ரக்ஷிக்குமது உன்பேறாக நினைத்திருக்கும் சுத்தியோகத்தையுடையவனே! (புட்கொடியாய்)†இவை எல்லாவற்றுக்கும் கொடிகட்டியிருக்கிறவனே! (நெடுமாலே) ஆஸ்ரிதர்பக்கல் மிக்கவ்யாமோஹத்தையுடையவனே!

(தீவாய் நாகணையில் துயில்வானே) ஆஸ்ரித ஸம்ஶ்லேஷைகஸ்வபாவனே! உனக்கு என்வருகிறதோ என்றஞ்சவேண்டாதபடி சத்ருக்கள்மேலே நெருப்பை உமிழுகிறதிருவநந்தாழ்வான்மேலே சாய்ந்தருளினவனே! (திருமாலே) அப்படுக்கையிலே சாய்வது இருவருமான சேர்த்தியோடேயாய்த்து. (இனிச்செய்வதொன்றறியேன்) இனி நான் என்னுடைய ஹிதவிஷயமாகச் செய்வதொன்றறியேன். "அய்யோ" அய்யோ" என்று அநந்யகதியான என்பக்கலிலே க்ருபை பண்ணியருளவேணும். (அழுந்தூர்மேல்) க்ருபை பண்ணுகைக்கு வந்து நிற்கிறஇடமன்றோ இவ்விடம். ... ... ... ... (௯)

---

அ௩.—ஒன்பதாம்பாட்டு. (கோவாயித்யாதி) கீழ்ப்பாட்டிலே, தமக்கடுத்த கூறைசோறிவை தரவேணுமென்று, தம் அபீஷ்டத்தை ப்ரார்த்தித்தார், இதில் இந்த்ரியங்கள் தங்களுக்கு அடுத்தவற்றைத்தரச்சொல்லி பாதி (பாதி)க்கிறன, அந்த பாதை (பாதை) யை நீக்கி யருளவேணுமென்று அநிஷ்டநிவ்ருத்தியை ப்ரார்த்திக்கிறாரென்று ஸங்கதி.

"கோவாய்" என்று இப்போது சொல்லுகைக்கு வேறுகோவுண்டோ வென்ன வருளிச்செய்கிறார் (நீ சேஷியித்யாதி). நீரும் "கூறைசோறிவை தந்தெனக்கருளி" என்றுநின்றீரே, இவை அவற்றை ப்ரார்த்தித்தால் "குமைத்து" என்று சொல்லுவானென்னென்ன வருளிச்செய்கிறார் (நான் கூறையுமித்யாதி).

பலிதார்த்தத்தை அருளிச் செய்து விசேஷண ப்ரயோஜநகத(ந்)நமுகேந சப்தார்த்தமருளிச்செய்கிறார் (உனக்கென்வருகிறதோ வித்யாதி). "நான்அவரைப்பொறுக்ககிலேன்" என்றுநின்றீர், நீர்தானே அவற்றைப் போக்கும் விரகு பார்த்துக்கொள்ளவொண்ணாதோ வென்ன (இனிச்செய்வதொன்றறியேன்) என்கிறாரென்று மதுக்குத் தாத்பர்யமருளிச் செய்கிறார் (இனிநானித்யாதி). ... ... ... ... ... ... (௯)

---

† (பா) ரக்ஷணத்துக்கு.

மூ.— அன்னமன்னு பைம்பூம்பொழில்சூழ்ந்த
அழுந்தூர் மேல் திசைநின்ற வம்மானைக்
கன்னிமன்னு திண்டோள் கலிகன்றி
ஆலிநாடன் மங்கைக்குலவேந்தன்
சொன்னவிந்தமிழ் நன்மணிக்கோவை
தூயமாலை யிவை பத்தும் வல்லார்
மன்னி மன்னவராயுலகாண்டு மான
வெண்குடைக்கீழ் மகிழ்வாரே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

—ooo—

| பதம். | உரை. |
|---|---|
| அன்னம் | ஹம்ஸங்களானவை |
| மன்னு | நித்யவாஸம் பண்ணு நிற்பதாய் |
| பை | பரந்த |
| பூ | பூக்களை யுடைத்தான |
| பொழில் | சோலைகளாலே |
| சூழ்ந்த | வ்யாப்தமாயிருக்கிற |
| அழுந்தூர் | திருவழுந்தூரில் |
| மேல்திசை | மேல்புறத்தில் |
| நின்ற | எழுந்தருளியிருக்கிற |
| அம்மானை | ஸ்வாமிவிஷயமாக[து |
| கன்னி | அழிவில்லாமை யான |
| மன்னு | பொருந்தியிருக்கிற(எப்போது மழிவில்லாத) |
| திண் | பலத்தையுடைய |
| தோள் | புஜங்களையுடைய, |
| ஆலிநாடன் | திருவாலி நாட்டுக்கு நிர்வாஹகராய், |
| மங்கை | திருமங்கையி லுள்ளார்க்கு |
| குல வேந்தன் | குலக்ரமமாக வந்த ராஜாவான |
| கலிகன்றி | ஆழ்வார் [டதாய், |
| சொன்ன | அருளிச் செய்யப்பட் |
| இன்தமிழ் | அழகிய தமிழ்பாஷை யிலுள்ளதாய், |
| நல் | நிர்த்துஷ்டமான |
| மணி | ரத்நங்களுடைய |
| கோவை | மாலைபோலே அதிப்லாக்யமாய், |
| தூய | கவியில் தோஷமற்று பரிசுத்தமா யிருப்பதாய் |
| மாலை | சப்தஸந்தர்ப்பரூபமா யிருக்கிற |
| இவைபத்தும் | இப்பத்துப்பாசுரங்களையும் [கன் |
| வல்லார் | அப்யஸிக்க வல்லவர் |
| மன்னவராய் | ராஜாக்களாய்க் கொண்டு |
| மன்னி | சி(ல)ரகால மிருந்து |
| உலகு ஆண்டு | லோகங்களைப் பரிபாலநம்பண்ணி |
| மானம் | பெரியதாய் |
| வெண்குடைக் கீழ் | வெளுத்து (பரிதாய் இருக்கிற) குடையின் கீழே இருந்து |
| மகிழ்வார் | ஆநந்திப்பார்கள்(௧௦) |

வ்யா.—பத்தாம்பாட்டு. (அன்னமன்னு மித்யாதி) அன்னங்கள் நித்யவாஸம்பண்ணுகிற பரந்தபூவையுடைத்தான பொழிலாலே சூழப்பட்ட: அன்னங்கள் ஒன்றோடொன்று ஊடினால், உடம்போடுடம்பு அணுகாதபடி கிடக்கைக்குவேண்டும் பரப்பு போந்திருக்குமாய்த்து பூவின்பெருமை. (அழுந்தூர் மேல்திசைநின்ற வம்மானை) திருவழுந்தூரில் மேல்பார்ஶ்வத்திலே நின்ற ஸர்வாதிகனான ஸர்வேஶ்வரனை. (கன்னிமன்னு திண்டோள்) ஒருநாளுமழியாத மிடுக்கையுடைத்தானதோள்களையுடைய ஆழ்வார், திருவாலிநாட்டுக்கு நிர்வாஹகராயுள்ளார், திருமங்கையிலுள்ளார்க்குப் பழையதாக ராஜாக்களாயுள்ளார். (சொன்ன விந்தமிழ்) சொன்ன இனியதமிழான இந்தநல்லரத்நமாலையை லக்ஷணங்களில் குறைவற்றிருக்கிற இப்பத்தையும் அப்யஸிக்க வல்லவர்கள். (மன்னிமன்னவராய்) சிரகாலம் ராஜாக்களாய். லோகங்களையடைய நிர்வஹித்துப் பெரிய முத்தின் குடைக்கீழேஇருந்து நிரவதிக ப்ரீதியுக்தராகப் பெறுவர். இந்த்ரியவஶ்யதையை அநுஸந்தித்து அஞ்சினவர், இத்தை ப(ஃ)லமாகச் சொல்லுவானென்னென்னில்; "இவர்க்கு அந்த ஐஶ்வர்யம், பாகவத சேஷமாக்குகைக்கு உடலாகையாலே, அதுவும் புருஷார்த்தத்திலே புக்குப்போய்த்துகாண்" என்று பட்டர் அருளிச்செய்காராம். ... ... ... (௧0)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

அரு.—பத்தாம்பாட்டு. (அன்னமித்யாதி) பூவை (பரந்த) என்று விசேஷித்ததுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (அன்னமித்யாதி). "மான" என்ற தினர்த்தம் (பெரிய) என்றது. ... ... ... ... (௧0)

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஏழாம்பத்து ஏழாந்திருமொழி முடிந்தது.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஏழாம்பத்து எட்டாந்திருமொழி

## செங்கமலம் ப்ரவேசம்.

வ்யா.—(செங்கமலத் திருமகளும்) இந்த்ரிய வஶ்யதைக்கஞ்சி கூப்பிட்டார், நீர் இங்ஙனே கிடந்து கூப்பிடுகிறதென், பேரளவுடைய ப்ரஹ்மாதிகள் தங்கள் ஆபத்தை அறிவிப்பிக்கும்போது அக்கரையி

லநின்று கூப்பிடுமதொழிய அவர்களுக்கும் கிட்ட வொண்ணுதழுழி.
ருக்கக்கடவநாம், உமக்குப்பட்டகுறை அறிவிக்கலாம்படி பண்
ரிஞுமாய் நின்ரேமே, இவ்வளவும்வாநின்ற நாம், இனிமேலு
ளகார்யம்செய்வுதோமென்று உமக்குஆறியிருக்கக்குறையுண்டோ?
ம்முடைய ஸர்வாபேக்ஷிதங்களும் செய்கைக்கன்ரே நாமிங்குவந்து
ற்கிறதென்று, அங்குற்றை நிலையைக்காட்டிக்கொடுக்க, அத்தை
நுஸந்தித்து த்ருப்தராய், பிறரைப்பார்த்து, "இவனல்லது ஆஶ்ர
ணீயனில்லை, ஆனபின்பு எல்லாருமவனை ஆஶ்ரயித்து உஜ்ஜீவித்
ப்போகப் பாருங்கோள்" என்கிருர். ... ... ... ... *

---

அரு.—செங்கமலத்திருமகளும் ப்ரவேசம். கீழ்த்திருமொழியில், அதி
ங்கையாலே குறைப்பட்டிருந்த இவ்வாழ்வார் இத்திருமொழியிலே
ரோபதேசத்திலே புகுருகைக்கு ஸங்கதி யென்னென்ன வருளிச் செய்கி
ர் (இந்த்ரியேத்யாதி). (பட்டகுறை) என்றது. அநாதியாக இந்த்ரியங்
ளி லகப்பட்ட குறை யென்கை. ... ... ... ... ... *

மூ.— செங்கமலத்திருமகளும் புவியும் செம்பொன்
திருவடியி னிணைவருட முனிவரேத்த
வங்கமலிதடங்கடலுளநந்தனென்னும்
வரியரவினணைத் துயின்ற மாயோன்காண்மின்
எங்குமலிநிறை புகழ்நால் வேதமைந்து
வேள்விகளும் கேள்விகளுமியன்றதன்மை
அங்கமலத்தயனனையார் பயிலும் செல்வத்
தணியழுந்தூர் நின்றுகந்த வமரர்கோவே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ங்கும் | எல்லா வாக்யங்களிலும் | இயன்ற | அதிசயித்திருக்கிற |
| லி | (ப்ராமாண்யம்) மிக்கிருப்பதாய், | தன்மை | ஸ்வபாவத்தையுடையராய், |
| றைபுகழ் | (அத்தால்) பூர்ணமாயயஶஸ்ஸையுடையதான | அம்கமலத்து | அழகிய திருநாபி கமலத்தைப் பிறப்பிடமாகவுடைய |
| ால்வேதம் | நாலுவேதங்களாலும் | அயன் அனையார் | ப்ரஹ்மாவோடொத்திருக்கிற ப்ராஹ்மணர்கள் |
| ந்து வேள்வி | பஞ்சமஹாயஜ்ஞங்களாலும் | பயிலும் | நித்யவாஸம் பண்ணுகையிலுண்டான |
| கேள்விகளும் | (மற்றும்) கேட்டறியவேண்டும் இ(ஆ)லஶ்ருதி முதலானவற்றிலும் | செல்வத்து | ஸம்பத்தையுடைத்தாய் |

| | | | |
|---|---|---|---|
| அணி | லீலாவிபூதிக்கு ஆபரணமாயிருக்கிற | வருட | பிடியாநிற்க, |
| அழுந்தூர் | திருவழுந்தூரில் | முனிவர் | ஸநகாதிருஷிகள் |
| உகந்துநின்ற | உகப்புடனே எழுந்தருளி யிருக்கிறவனாய் | ஏத்த | ஸ்தோத்ரம் பண்ணாநிற்க, |
| அமரர்கோ | நித்யஸூரிகள் தலைவனான எம்பெருமானவன், | வங்கம் | மரக்கலங்கள் |
| செம் கமலம் | அழகிய தாமரைப்பூவை இருப்பிடமாகவுடைய [ரும் | மலி | நிறைந்திருக்கிற |
| திருமகளும் | பெரிய பிராட்டியா | தடம் | விசாலமான |
| புவியும் | ஸ்ரீபூமிப்பிராட்டியும் | கடலுள் | ஸமுத்ரத்தில் |
| செம்பொன் | ஸுந்தரமாய் ஸ்ப்ருஹணீயமா யிருக்கிற | அநந்தன் என்னும் | அநந்தனென்று ப்ரஸித்தனாய் [ன |
| திருவடியின் இணை | திருவடிக ளிரண்டையும் | வரி | ரேகைகளையுடையனா |
| | | அரவின் அணை | திருவநந்தாழ்வானாகிற படுக்கையின் மேலே |
| | | துயின்ற | கண்வளரா நின்ற |
| | | மாயோன்காண்மின் | ஸர்வேஶ்வரன் இவர். (க) |

வ்யா. —முதற்பாட்டு. (செங்கமலத்திருமகளும்) ஆஶ்ரிதருடைய ஸர்வாபராதங்களையும்பொறுப்பிக்கும் பெரியபிராட்டியாரும். (புவியும்) அப்பொறைக்கு உவாத்தான ஸ்ரீபூமிப் பிராட்டியும், ஸ்ப்ருஹணீயமாய் ஒன்றுக்கொன்று ஒப்பான திருவடிகளை வருட; ஸநகாதிகள் நின்று ஸ்துதிக்க. (வங்கமலிதடங்கடலுள்) மரக்கலங்களால் மிக்கிருக்கிற பெரியகடலிலே. (அநந்தனென்னும்) திருவநந்தாழ்வானென்று ப்ரஸித்தனாயிருக்கிறவன்மேலே. ஸர்வேஶ்வரனையும் "அநந்தன்" என்னக்கடவதிறே-த்ரிவித பரிச்சேதராஹித்யத்தாலே; அநந்தன் தன்னையும் விளாய்க்குலைக்கொள்ளவல்லனாயிருக்கையாலே அநந்தனென்று ப்ரஸித்தியை யுடையனான. (வரியரவினணைத்துயின்ற மாயோன் காண்மின்) குன்றிச்சூடுபோலே ஸர்வேஶ்வரனுக்கு வைத்த கண்மாறாதே கண்டுகொண்டிருக்கவேண்டும்படி தர்ஶநீயமான வரிகளையுடையனாய், ஶைத்ய ஸௌரப்யாதிகளை ப்ரக்ருதியாகவுடைய திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளின ஸர்வேஶ்வரன் கிடீர்காணிங்குவந்து நிற்கிறவன்.

(எங்குமலிநிறைபுகழ்நாதி) வேதப்ராமாண்யம் ப்ராதேஶிகமாயிருக்கையன்றிக்கே, எங்குமொக்க மிகுகையால்வந்த நிறைந்த புக

ழையுடைத்தான நாலுவகைப்பட்ட வேதம், பஞ்சமஹாயஜ்ஞம், மற்
யம் ஸ்ரவணத்தாலே அறியவேண்டியவற்றாலும் வந்த இயற்றியை
வபா ஞுவமாகவுடையராய். (அங்கமலத்தயனனையார்) தனித்தனி
யேப்ரஹ்மாவைப்போலே ஸ்ருஷ்டிக்க க்ஷமராயிருக்கிறப்ராஹ்மணர்
த்யவாஸம் பண்ணுகையால் வந்த நிரவதிக ஸம்பத்தையுடைய திரு
ழுந்தூரிலே வந்துநின்றருளின இதுதான் தனக்கு அலப்யலாப
ாகக்கொண்டு நிற்கிறவன் * அயர்வறு மமரர்களதிபதியான ஸர்
வேஸ்வரன் கிடிகோள்; அவனை ஆஸ்ரயித்து உஜ்ஜீவித்துப்போகப்
ாருங்கோள் என்கிருர். ... ... ... ... ... (க)

அரு.—முதற்பாட்டு. (செங்கமலமித்யாதி) செம்மையுடைய கமலத்
திருமகளென்று சப்தார்த்தமாக்கி தாத்பர்யமருளிச்செய்கிருர் (ஆஸ்ரிதரு
டைய வித்யாதி). த்ரிவிதபரிச்சேதராஹித்ய மிவனுக்குண்டோ? "அகங்
ன்" என்னும் ப்ரஸித்தி வருகைக்கு என்ன வருளிச்செய்கிருர் (ஸர்
வேஸ்வரனையுமித்யாதி). "வரி" என்று விசேஷித்ததுக்கு உட்கருத்தரு
ளிச் செய்கிருர் (குன்றிச்சூடித்யாதி). (குன்றிச்சூடு) கு(ஐ)ஞ்சாபீட(ஃ)ம்.
(ப்ராதேசிகமாயிருக்கையன்றிக்கே) என்றது-சிலவாக்யங்களில் ப்ரா
ாண்யமுண்டாய், சிலவாக்யங்களில் ப்ராமாண்யமின்றிக்கே யிருக்கை
ன்றிக்கே என்கை. அங்கங்களைத் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிருர்
மற்று மித்யாதி). "இயற்றி" என்றது-அதிசயமென்றபடி. "அமரர்கோ
வ-காண்மின்" என்றந்வயித்து அருளிச்செய்கிருர் (அயர்வித்யாதி).(க)

மூ.— முன்னிவ்வுலகேழுமிருள்மண்டியுண்ண
முனிவரொடு தானவர்கள் திகைப்பவந்து
பன்னுகலைநால்வேதப் பொருளையெல்லாம்
பரிமுகமாயருளிய வெம்பரமன் காண்மின்
செந்நெல்மலிகதிர்க் கவரிவீசச்சங்க
மவைமுரலச் செங்கமல மலரையேறி
அன்னமலிபெடையோடு மமரும் செல்வத்
தணியழுந்தூர் நின்றுகந்த வமரர்கோவே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| செம்நெல் | ஸ்லாக்யமான நெல் பயிரினுடைய | அவை | அங்கே ஸஞ்சரிக்கிற |
| | | சங்கம் | சங்குகளானவை |
| மலி கதிர் | ஸம்ருத்தமான கதிர்களானவை | முரல | முழங்காநிற்க, |
| | | செம் | ஸுந்தரமான [லே |
| கவரி வீச | சாமரங்கள் (போல்) வீசாநிற்க; | கமல மலரை | தாமரைப்பூவின் மே |

| | |
|---|---|
| ஏறி | ஏறி |
| அன்னம் | ஹம்ஸமானது |
| மலி | போக (ஞூX) ப்ரசுரமான [கூட |
| பெடையோடும் | (தன்) பேடையோடு |
| அமரும் | பொருந்திகண்வளரா [நின்ற |
| செல்வத்து அணியழுந்தூர் நின்றுகந்தஅமரர்கோவே! | |
| முன் | முற்காலத்தில் |
| இவ்வேழுலகும் | இந்தஸப்தலோகங்களையும் [னது |
| இருள் | அஜ்ஞாநாந்தகாரமா |
| மண்டி | அடர்ந்திருந்து |
| உண்ண | புஜிக்கையில்(தன்வசமாக்கிக் கொண்டு கலஹீகரிக்கையில்) |
| முனிவரொடு | ஸநகாதி ருஷிகளுடன் கூட |
| தாநவர்கள் | ராக்ஷஸர்களும் |
| திசைப்ப | ப்ரமப்பட்டு நிற்க (அவ்வளவில்) |
| வந்து | (தான் பரமபதத்தில் நின்றும்)வந்து, |
| பண்ணு | விஸ்த்ருதமாயுள்ள |
| கலை | சாஸ்த்ரங்களையுடைத்தான [டைய |
| நால் வேதம் | நாலு வேதங்களினு |
| பொருளை எல்லாம் | அர்த்தங்களையெல்லாம் [ண்டு |
| பரிமுகமாய் | ஹயக்ரீவனாய்க் கொ |
| அருளிய | உபதேசித்தருளின |
| எம்பரமன்காண்மின் | நம்முடைய ஸர்வாதிகன் கிடீர். (உ) |

வ்யா. —இரண்டாம்பாட்டு. (முன்னிவ்வுலகேழு மிருள்மண்டியுண்ண)பண்டு இவ்வுலகங்களேழையும்அந்தகாரமானது தான்கண்டபடியே பரந்து புஜிக்க. (முனிவரொடு தாநவர்கள்திசைப்ப) ஸாத்விகரோடு அஸாத்விகரோடு வாசியற அறிவுகெட்டுக் கலங்க வந்தவதரித்து, பரம்பின கலைகளையுடைத்தான நாலுவகைப்பட்ட வேதங்களினுடைய அர்த்தத்தையெல்லாம் ஹயக்ரீவமூர்த்தியாய் அருளிச்செய்த ஸர்வஸ்மாத்பரன் கிடீர்.

(செங்நெல்மலிகதிர் கவரிவீச) செந்நெலினுடைய கனத்த கதிரானது கவரி வீச. (சங்கமவைமுரல) அங்கே ஊருகிற சங்கங்களானவை த்வநிக்க. (செங்கமலமலரையேறி) செவ்விபெற அலர்ந்த தாமரைப்பூவைப்படுக்கையாகக்கொண்டு அதின்மேலேஏறி. (அன்னமலிபெடையோடுமமரும் செல்வத்து ) அன்னமானது அப்பூம்படுக்கையிலே போக (ஞூX) ஸ்ரோதஸ்ஸில் தன்னைவிஞ்சின பெடையோடொக்கச் சாய்கிற நிரவதிக ஸம்பத்தையுடைய. அங்குத்தை திர்யக்குகளுமகப்பட போக (ஞூX) ப்ரதாநமாயாய்த் திருப்பது. (உ)

அரு — இரண்டாம்பாட்டு. (முன்னித்யாதி) கீழ்ப்பாட்டில், திருப்பாற்கடலில் கிடந்தான் கிடீரென்றார்; அங்கு நின்றும்போந்து வேதப்ரதா(நா)நம் பண்ணின மஹோபகாரகன் இவர் என்று உபபாதிக்கிறாரென்று ஸங்கதி.

(அந்தகாரமானது) என்றது - அஜ்ஞாநாந்தகாரமானது என்றபடி. இங்ஙனன்றாகில், வேதப்ரதாநத்தால் பாஹ்யாந்தகாரம் போகாதிறே. (கலங்க) என்ற வநந்தரம், "அது திர" என்று சேஷம்.

சங்கங்களை "அவை" என்று விசேஷிக்கையாலே செந்நெலிலே வர்த்திக்கிறவை என்று விவக்ஷித்து, ஜந்துக்களாகையாலே கூப்பிடும் என்று அத்தை கா(ர)ணத்தாலேயாக்கி யருளிச்செய்கிறார் (அங்கேயாரு கிற வித்யாதி). "அன்னம்" என்பதும் "பெடையோடும்" என்பதும் ஜாத்யேகவசநமாய், பல அன்னங்கள் பலபேடைகளோடு அமரும்என்று விவக்ஷித்து அத்தை அருளிச்செய்கிறார் (அங்குத்தை திர்யக்குக்களுமித்யாதி). ... ... ... ... ... ... ... ... (உ)

மூ. — குலத்தலைய மதவேழம் பொய்கைபுக்குக்
கோள்முதலை பிடிக்கவதற் கனுங்கிநின்று
நிலத்திகழும் மலர்ச்சுடரேய் சோதியென்ன
நெஞ்சிடர் தீர்த்தருளிய வென் நிமலன்காண்மின்
மலைத்திகழ் சந்தகில் கநகமணியுங்கொண்டு
வந்துந்திவயல்கள் தோறும் மடைகள்பாய
அலைத்துவரும் பொன்னிவளம் பெருகும்செல்வத்
தணியழுந்தூர் நின்றுகந்த வமரர்கோவே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மலை | ஸஹ்யபர்வதத்தில் | பாய | பாயும்படியாக |
| திகழ் | விளங்காநின்ற | அலைத்துவரும் | அலையெறிந்துகொண்டு வாராநின்ற |
| சந்து | சந்தநமரங்களையும் | பொன்னி | திருக்காவேரியானது |
| அகில் | அகில்கட்டைகளையும் | வளம் | ஸம்ருத்தமாக |
| கநகம் | ஸுவர்ணங்களையும் | பெருகும் | ப்ரவஹியா நிற்கையி லுண்டான |
| மணியும் | ரத்நங்களையும் | செல்வத்து அணியழுந்தூர் நின்றுகந்த அமரர்கோ, | |
| கொண்டுவந்து | திரட்டிக்கொண்டுவந்து | | |
| உந்தி | தள்ளி | | |
| வயல்கள்தோறும் | கழனிகளெங்கும் | குலம் | நல்லஜாதியில் பிறந்த (யானைகளுக்குள் ளே) |
| மடைகள் | மடைகளிலே | | |

தலை

| | |
|---|---|
| தலைய | ச்ரேஷ்ட்டமானதும் |
| மதம் | கொழுப்புடையதுமான |
| வேழம் | ஸ்ரீ கஜேந்த்ரமானது |
| பொய்கை | மடுவிலே |
| புக்கு | ப்ரவேசித்து (நீற்கையில், அங்கு) |
| கோள் | மிடுக்கையுடைத்தான |
| முதலை | முதலையானது [ழுக்க |
| பிடிக்க | (தன்காலைப்)பற்றி இ |
| அதற்கு | அந்த முதலைக்கு |
| அனுங்கின்று | பயப்பட்டிருந்து, |
| நில | சந்த்ரிகையை |
| திகழும் | சுற்றும்விளங்கப்பண்ணுகின்ற [தான |
| மலர் | விகாஸத்தையுடைத் |
| சுடர் | தேஜோரூபியான சந்த்ரனோடு |
| ஏய் | ஒத்திருக்கிற |
| சோதி | (குளிர்ந்த) தேஜஸ்ஸையுடையவனே! |
| என்ன | என்றுகூப்பிட, (அங்கே எழுந்தருளி) |
| நெஞ்சு | (அதின்)மநஸ்ஸிலுண்டான |
| இடர் | துக்கத்தை [ய் |
| தீர்த்தருளிய | போக்கியருளினவனு |
| என் | (அதை) எனக்கு ப்ரகாசிப்பித்தவனாய், |
| நிமலன்கண்டீர் | (அத்தால்) பரிசுத்தனானவன் கிடீர். (௩) |

வ்யா. —மூன்றும்பாட்டு. (குலத்தலையமதவேழம்) நல்ல ஆகரத்திலேபிறந்துதான் ஆனைகளுக்கெல்லாம் ப்ரதா(நா)நமாய், மதமுதிதமாய், மூலையடியே திரிகிற ஆனை விழுக்காடறியாதே தன்னிலமல்லாத வேற்றுநிலத்திலே புக்கு கொடிதானமுதலையின்கையிலே அகப்பட்ட தாய்த்து. (கோள்முதலைபிடிக்க) சாபோபஹதமாய் அதுக்குப் பரிஹாரமாக "எப்போதோ இது நம்கையிலே வந்தகப்படுவது" என்றிருக்கிற முதலையின்கையிலே புக்குப் பிடிபட. (அதற்கனுங்கின்று) அதற்கு வெருவி, முதலையினுடைய வ்யாபாரமேயாய் தன்னுடைய வ்யாபாரமற்றுநின்று. (நிலத்திகழு மலர்ச்சுடரேய் சோதியென்ன) நிலாவை பரப்பாநின்ற விகாஸத்தையுடைய சுடருண்டு சந்த்ரன், அவனோடொத்த தண்ணளியை யுடையையாய்க்கொண்டு வந்து தோற்றவேணுமென்ன; (நெஞ்சிடர் தீர்த்தருளிய என்நிமலன் காண்மின்) அதினுடைய கையில் பூச்செவ்வி மாறுதபடி தன் திருவடிகளிலே இடுவித்துக்கொண்டு அதினுடைய ஹ்ருதயத்தில் வ்யஸநத்தைப்போக்கி யருளுகையாலே, ஆஸ்ரிதருடைய விரோதியைப் போக்கி, அவர்களுடைய அபேக்ஷிதஸம்விதாநம்பண்ணும் ஸ்வபா(வ)வனென்கிற சுத்தியை எனக்குப்ரகாசிப்பித்தவன் கிடீர்.

(மலைத்திகழ் சந்தகில் கநகமணியும்கொண்டு) ஸஹ்யபர்வதத்திலே விளங்காநின்ற சந்தநத்தையும், அகிலையும், பொன்னையும், ரத்ந

ங்களையும் வாரிக்கொண்டுபோந்து. (வந்துந்தியித்யாதி) பா(ஈ)ரம் பொறுக்கமாட்டாமை சுமை பொகடுவாரைப்போலே தள்ளி, வயலென்று பேர்பெற்ற விடமெங்கும் மடைகள்தோறும் வந்து பாயாநிற்குமாய்த்துப் பொன்னியானது. இப்படி அலைத்துக்கொண்டு பெருகிவாராநின்ற காவிரியால் வந்த நிரவதிக ஸம்பத்தையுடைய. அவன்தான் ஆர்த்தரிருந்தவிடமெங்கும் வந்து ரக்ஷிக்குமாபோலே, இந்த ஆற்றுவரவும் அபேக்ஷிதமான இடமெங்கும் வந்து பாயாநிற்குமாய்த்து. ... ... ... ... ... ... (௩)

அந.—மூன்றும்பாட்டு. (குலவித்யாதி) கீழ்ப்பாட்டில், அஜ்ஞாநம்போம்படி வேதப்ரதாநம் பண்ணினபடி சொல்லிற்று, இதில், அந்தவேதத்தில் ப்ரதிபாத்யமான கைங்கர்யத்தை விரோதிநிவ்ருத்தி பூர்வகமாகத் தானே கொண்டருளுமவனென்னுமதுக் குறுப்பாக, ஸ்ரீகஜேந்த்ரரக்ஷணத்தை உபதேசிக்கிறுரென்று ஸங்கதி.

"குல" என்றது-க்ருஹவாசியாய் அருளிச்செய்கிறுர் (ஆகரத்திலே) என்று. "பிடிக்க" என்கையாலே ஏற்கவே பிடிக்கக் கோலினமை தோற்றுகையாலே பலிதார்த்தமருளிச் செய்கிறுர் (சாமே பஹத மாயித்யாதி). கொடுமையின்படிதன்னை எல்லைநிலத்தளவு மருளிச்செய்தா ரென்னவுமாம்.

பாட்டுக்கெல்லாம்தொகுத்து பாவமருளிச்செய்கிறுர்(அவன்தானித்யாதி)

மூ. — சிலம்புமுதல் கலனணிந்தோர் செங்கறதுன்றம்
திகழ்ந்ததெனத் திருவுருவம் பன்றியாகி
இலங்குபுவி மடந்தைதனை யிடந்துபுல்கி
எயிற்றிடைவைத்தருளிய வெம்மீசன் காண்மின்
புலம்புசிறை வண்டொலிப்பப் பூகம்தொக்கப்
பொழில்கள்தொறும் குயில்கூவ மயில்களால
அலம்புதிரைப் புனல்புடைசூழ்ந் தழகார் செல்வத்
தணியழுந்தூர் நின்றுகந்த வமரர்கோவே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| புலம்பு | அழகிதாக விளங்காநின்ற | பொழில்கள் தொறும் | சோலைகளெங்கும் |
| சிறை | இறகுகளையுடைய | குயில் | கோகிலங்களானவை |
| வண்டு | வண்டுகளானவை | கூவ | கூவாநிற்பதாய், |
| ஒலிப்ப | த்வநியாநிற்பதாய், | மயில்கள் | மயில்களானவை |
| பூகம் | பாக்குமரங்கள் | ஆல | கூத்தாடாநிற்பதாய், |
| தொக்க | திரண்டிருக்கிற | அலம்பு | அலையாநின்ற |

| | |
|---|---|
| திரை | அலைகளையுடைத்தான |
| புனல் | ஜலமானது [ளிலே |
| புடை | பர்யந்தப்ரதேசங்க |
| சூழ்ந்து | வ்யாப்தமாய்க் கொண்டு |
| அழகு ஆர் | அழகுமிக்கிருக்கிற |
| செல்வத்தணியமூந்தூர் நின்றுகந்த அமரர்கோ, | |
| ஓர் | அத்விதீயமாய் |
| செம் கல் | சிவந்த ரத்னங்களையுடைத்தான |
| குன்றம் | மேருபர்வதமானது |
| திகழ்ந்ததென | விளங்குவதுபோலவிராகின்றதாய், |
| சிலம்புமுதல் | தண்டைச்சிலம்பு முதலான |
| கலன் | ஆபரணங்களை [திற |
| அணிந்து | சாத்திக்கொண்டிருக் |

| | |
|---|---|
| திருவுருவம் | அழகியவடிவையுடைய |
| பன்றியாகி | மஹாவராஹமாயவதரித்து, |
| இலங்கு | விளங்காநின்ற |
| புவிமடந்தை தனை | ஸ்ரீபூமிப்பிராட்டியை |
| இடந்து | (அண்டபித்தியில்நின்றும்) குத்தியெடுத்து [ச்லேஷித்து |
| புல்கி | (அவளுடன்) ஸம்ஸ் |
| எயிறு இடை | தந்தத்தினிடையிலே |
| வைத்தருளிய | வைத்துக்கொண்டு (ஏறி) அருளினவனாய் [லாம் |
| எம் | (அடியோமெல்) நமக்கெல் |
| ஈசன் காண்மின் | நிர்வாஹகனானவர் ஸர்வேஶ்வரன்கிடீர்.(ச) |

வ்யா. —நாலாம்பாட்டு. (சிலம்புமுதல் கலனணிந்து) சிலம்பு தொடக்கமான ஆபரணங்கள் பலவற்றையுமணிந்து ஒரு மேருவானது நின்று விளங்குமாபோலே, வராஹவேஷத்தையுடையனாய். (இலங்கு புவி) அண்டபி(த்)த்தியிலே புக்குச் சேர்ந்த பூமியை இடந்தெடுத்துக் கொண்டேறி, அந்தபூமிக்கும் அபிமாநிநியான ஸ்ரீபூமிப்பிராட்டியை அணைத்து, அந்தபூமிதன்னைத் திருவெயிற்றிலே ஒருநீலமலையமுத்திருப்போலே வைத்தருளின அச்செயலைக்காட்டி, என்னை எழுதிக்கொண்டவன் கிடீர்.

(புலம்புசிறை வண்டொலிப்ப) அழகிய சிறகையுடைத்தான வண்டுகள் மதுபாநமத்தமாய் த்வநிக்க. (பூகநெருக்கப் பொழில்கள்தொறும் குயில்கள்கூவ) கமுகுகள் திரண்ட சோலைகள்தோறும் குயில்களானவை, முக்தர் ஸாமகாநம்பண்ணுமாபோலே கூவ, (மயில்களால) அதினுடைய பாட்டுக்கீடாக மயில்கள் ஆலிக்க. (அலம்பு திரைப்புனல் புடைசூழ்ந்தழகார் செல்வத்து) அலைத்துக்கொடுவருகிற திரைகளையுடைத்தான ஜலமானது பர்யந்தமெங்கும் சூழ்கையால்வந்த திரவதிக ஸம்பத்தையுடைத்தாய் ஸம்ஸாரவிபூதிக்கு ஆபர

ளார்போலேயிருக்கிற திருவழுந்தூரிலே. ... ... ... (ச)

---

ஆ.நு — நாலாம்பாட்டு. (சிலம்பித்யாதி) கீழ்ப்பாட்டில், "நிலத்திகழு மலர்ச்சுடரேய் சோதி" என்று பெருமிடறு செய்து கூப்பிட வந்து உபகரித்தவனென்றீர்; ஸம்ஸார ப்ரளயங்கொண்டிருக்கிற எங்களுக்கு அவன் கூப்பிடக்கூடுமோவென்னு மதிசங்கையிலே, ப்ரளயத்திலகப்பட்டுக் கூப்பிடவறியாத பூமியை யெடுத்தாப்போலே நம்மையு மெடுக்க வல்லவன் காணீர் என்று ஸ்ரீவராஹவ்ருத்தாந்தத்தை யருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

"செம்" சிவந்த "கல்" ரத்னங்களையுடைய "குன்றம்" மேருவானது இழிந்ததென்னும்படியாக. "சிலம்புமுதல் கலனணிந்து" இவ்வாபரணங்களையாலே மூட்டாக்கிட்டபடியாலே விளங்காநின்றுள்ள திருவுருவமுடைய வராஹமென்று விவக்ஷித்து அருளிச்செய்கிறார் (சிலம்பித்யாதி). "செங்கட்குன்றம்" என்று பாடமானபோது குன்றுக்கே விசேஷணமாய், அப்(பூ)தோபமையாக வ்யாக்யாநாந்தரமுண்டு, "குன்று" நீலாசலமென்று கருத்து. ... ... ... ... ... ... (ச)

மூ. — இனமேவு மடலரியி னுருவமாகித்
திறல்மேவு மிரணியன தாகங்கீண்டு
மனமேவும் வஞ்சனையால் வந்தபேய்ச்சி
மாளவுயிர் வவ்விய வெம்மாயோன்காண்மின்
இனமேவும் வரிவளைக்கை யேந்தும்கோவை
ஏய்வாய மரகதம்போல் கிளியினின்சொல்
அனமேவுநடைமடவார் பயிலும் செல்வத்
தணியழுந்தூர் நின்றுகந்தவமரர்கோவே. (ரு)

| பதம். | உரை. |
|---|---|
| இனம் மேவும் | வரிசைவரிசையாகப் பொருந்தியிருப்ப |
| வரி | அழகியதான [தாய் |
| வளைகை | வளைகளையுடைத்தான கைகளாலே |
| ஏந்தும் | தாங்கப்பட்ட, |
| கோவைவாய் | கோவைப் பழத்தோடொத்த |
| வாய | அதரத்தையுடைத்தாய், |
| மரகதம்போல் | மரகதப்பச்சை போன்ற வர்ணத்தையுடைத்தான |

| பதம். | உரை. |
|---|---|
| கிளியின் | கிளிகளினுடைய |
| இன்சொல் | மதுரமான சொல்லையுடையவர்களாய், |
| அனம் மேவும் | ஹம்ஸத்தோடு பொருந்தியிருக்கிற (ஸத்ருசமான) |
| நடை | நடையழகையுமுடையவர்களான |
| மடவார் | ஸ்த்ரீகள் |
| பயிலும் | நித்யவாஸம் பண்ணுகின்ற |

| | |
|---|---|
| செல்வத்தணியழுந்தூர் | நின்றுகந்த அமரர்க்கோ, |
| மேவும்சினம் | அதிசயிதமானகோபத்தையும் |
| அடல் | மிடுக்கையுமுடைய |
| அரியின்உருவமாகி | நரஸிம்ஹ வேஷத்தை யுடையனாய்க்கொண்டு, [ள்ள |
| திறல்மேவும் | ப(ப)லம் மிக்கிருந்து |
| இரணியனது | ஹிரண்யனுடைய |
| ஆகம் | சரீரத்தை |
| கீண்டு | பிளந்தவனும் |
| மனம் மேவும் | மநஸ்ஸிலே பொருந்தியிருக்கிற |
| வஞ்சனையால் | கபடத்தினாலே |
| வந்த | (கொல்ல) வந்த |
| பேய்ச்சி | பூதனையானவள் |
| மாள | முடியும்படியாக [னை |
| உயிர் | அவளுடைய ப்ராண [கொண்டு |
| வவ்விய | க்ர(க்ரு)ஹித்தவனாய்க் |
| எம் | (அவ்வாச்சர்யத்தை) எனக்கு(ப்ரகாசிப்பித்தவனுமான) |
| மாயோன்காண்மின் | ஆச்சர்யபூ(பூ)தன் இவர். (ரு) |

வ்யா. —அஞ்சாம்பாட்டு. (சினமேவு மடலரியினுருவமாகி) சிறுக்கன்பக்கலிலே அவன் மிகைத்துவரப்புக் கவாறே அதுகண்டு பொறுக்கமாட்டாமை, சினத்தையிட்டுவகுத்தாப்போலேயாய், கிட்டவொண்ணாத நரஸிம்ஹ வேஷத்தையுடையனாய். (திறல்மேவுமிரணியனதாகங்கீண்டு) நரஸிம்ஹத்துக்கும் பிற்காலியாத மிடுக்கையுடைய ஹிரண்யனுடைய உடலைக்கீண்டு. (மனமேவுமித்யாதி) இவனுடைய பருவத்தைக்கண்டால் "கெட்டேன், இவனை அழியச்செய்கையாவதென்" என்று நெஞ்சிலிரக்கம் பிறக்கையன்றிக்கே நெஞ்சிலே பொருந்தியிருக்கிற வஞ்சநத்தையுடையளாய்க்கொண்டு வந்த பூதனை முடியும்படி அவளுடைய முலைவழியே அவளுடைய ப்ராணன்களும் வற்றிவரும்படி முலையை அமுதுசெய்த ஆச்சர்யபூ(பூ)தன் கிடீர் இங்குவந்து நிற்கிறவன்.

(இனமேவுமித்யாதி) தர்சநீயமான வளையையுடைத்தான கைகளாலே ஏந்தப்பட்டு, இவர்கள் தங்களோடொத்துக் கோவைபோன்ற அதரத்தையுடைத்தாய், மரகதம்போன்ற நிறத்தையுடைத்தாயிருக்கிற கிளியினுடைய பேச்சுபோலே இனிதானபேச்சையுடையராய். கற்பிக்கிறவர்கள்பேச்சும் கிளியின் பேச்சும் வாசிதெரியாது அன்னம்போன்ற நடையுடைய ஸ்த்ரீகள் நெருங்கி வர்த்திக்கையால் வந்த நிரவதிக ஸம்பத்தையுடைய. ... ... ... ... (ரு)

அரு — அஞ்சாம்பாட்டு. (சினமேவுமித்யாதி)கீழ்ப்பாட்டுக்களில், அநுகூலனான ஸ்ரீ கஜேந்த்ர ரக்ஷணம்பண்ணி மஹிஷியான பூமிக்கு விரோதியான முறையாலே பூமியை உத்த(த்)ரித்தானென் றீரேயாகிலும், நாங்கள் அங்ஙனநுகூலிக்கவும் பெறுதே ஒரு ப்ரத்யாஸத்தியு மின்றிக்கே, விரோதியும் கனத்திருக்க ரக்ஷிக்கும்படி எங்ஙனேயென்ன ; விரோதிநிரஸநசீலனென்கிறு ரிங்கென்று ஸங்கதி.

இரண்டு பேச்சுக்கும் இனிமை ஒத்திருக்குமோவென்னவருளிச்செய்கிறுர் (கற்பிக்கிற வித்யாதி). ... ... ... ... ... (கு)

மூ. — வானவர் தம்துயர்தீரவந்துதோன்றி
மாணுருவாய் மூவடிமாவலியை வேண்டித்
தானமரவேழுலகு மளந்தவென்றித்
தனிமுதல்சக்கரப் படையென் தலைவன்காண்மின்
தேனமரும் பொழில் தழுவுமெழில்கொள்வீதிச்
செழுமாட மாளிகைகள் கூடந்தோறும்
ஆனதொல் சீர்மறையாளர் பயிலும்செல்வத்
தணியழுந்தூர் நின்றுகந்த வமரர்கோவே. (ரு)

| பதம். | உரை. |
|---|---|
| தேன் | மதுவானது [நின்ற |
| அமரும் | மாருதே ப்ரவஹியா |
| பொழில் | சோலைகளாலே |
| தழுவும் | சுற்றப்பட்டு |
| எழில்கொள் | அழகுமிக்கிருந்துள்ள |
| வீதி | வீதிகளிலும் |
| செழு | அழகிய |
| மாடம் | மண்டபங்களிலும் |
| மாளிகைகள் | அரண்மனைகளிலும் |
| கூடந்தோறும் | க்ருஹங்களிலும் [ராய் |
| ஆன | ஆத்மகுண ஸம்பந்ந |
| தொல்சீர் | பழையதான (அழிவற்ற) கீர்த்தியையுடையராய் |
| மறையாளர் | வேதாத்யயநபரரான ப்ராஹ்மணர்கள் |
| பயிலும் | நெருங்கி வர்த்திக்கிற |
| செல்வத்தணியழுந்தூர் நின்றுகந்த அமரர்கோ, | |

| பதம். | உரை. |
|---|---|
| வானவர்தம் | தேவர்களுடைய |
| துயர்தீர | துக்கம் போம்படியாக |
| தான் | (ஸர்வ வ்யாபியாய் அவாப்த ஸமஸ்த காமனுன) தான் |
| மாணுருவாய் | வாமந வேஷத்தையுடையனாய்க் கொண்டு |
| வந்துதோன்றி | வந்தவதரித்து |
| மாவலியை | மஹாபலியினிடத்தில் |
| மூவடி | மூன்றடியை |
| வேண்டி | யாசித்து (அதுபெற்றவாறே), |
| ஏழுலகும் | ஸப்தலோகங்களையும் |
| அமர | (தன் திருவடிக்கீழ்) அடங்கும்படியாக |
| அளந்த | ஆக்ரமித்தவனுய், |

| | | | |
|---|---|---|---|
| வென்றி | ஜயசீலமாய், | சக்கரம் | ஸுதர்சநத்தை |
| தனி | அத்விதீயமாய் | படை | ஆயுதமாகவுடையனாய் |
| முதல் | (ஆயுதங்களில்) ப்ரதா(நு)நமான | என் தலைவன் | எனக்கு ஸ்வாமியான |
| | | காண்மின் | ஸர்வேஸ்வரன் டீர். |

வ்யா.—ஆறும்பாட்டு. (வானவர்தம் துயர்தீர) அநந்ய ப்ரயோஜநராய் அவனையல்லதறியாதே (க) *தொடைபொத்ததுளப முடி கூடையும் பொலிந்து தோன்றுமவர்களுக்காகவன்றிக்கே, கார்யம்செய்து தலைக்கட்டின வாந்தரர், தான்ஈஸ்வரனென்னும் தேவர்களுக்கு அஸுரர்களால் வந்த துக்கம் போம்படி வந்தவதரித்து. (மாணுருவாய்) "அவன்பக்கலிலே பெறுவிடில் ஜீவிக்கைஅரிது" என்று தோற்றும் இரப்பிலே தகணேறின வடிவையுடையனாய், தனக்கில்லாதது மூவடியாய், அதுடையான் மஹாபலியாய், அவன்கையிலே தான் நீரேற்றுப்பெற்று, அந்த திருவடிகளின்கீழே எழுவகைப்பட்ட லோகங்களுமடங்கும்படிக்கீடாக வளர்ந்து. (வென்றித்தனிமுதல் சக்கரப்படை) வெற்றியை யுடைத்தாய், அத்விதீயமாய் ஆயுதங்களுக் கெல்லாம ப்ரதா(நு)நமாயிருக்கிற திருவாழியைப் பரிகரமாகவுடையனான என் ஸ்வாமிகிடீகோள். (உ) "த்ரிவிக்ரம க்ரமாக்ராந்த த்ரைலோக்ய ஸ்ப்புரதாயுதः—த்ரிவிக்ரம க்ராமாக்ராந்தத்ரைலோக்யஸ்ஸ்ப்புரதாயுதः" என்கிறபடியே யிருக்கிற திவ்யாயுதங்களையுடையவன். (ங) "ஜிதம் பகவதா ஜகத்—ஜிதம் பகவதா ஜகத்".

(தேனமரும் பொழில் தழுவுமெழில் கொள்வீதி) தேன்மாறுத பொழிலாலே தழுவப்பட்ட அழகையுடைத்தான வீதி. (செழுமாடமித்யாதி) அழகிய மாடங்கள், மாளிகைகள், கூடங்கள், மண்டபங்கள், மற்றுமவகாசமுள்ள இடமெங்கும். (ஆனதொல்சீர்) விஹார விருபங்களால் ஸம்பந்நரா † (ய், பழையதான சீரையுடையரா)யிருக்கிற ப்ராஹ்மணர் நெருங்குகையால் வந்தவிரகுதி ஸம்பத்தை யுடைய. ... ... ... ... ... ... (௬)

அ௩.—ஆறும்பாட்டு. (வானவரித்யாதி) கீழ்ப்பாட்டில் ஆஸ்ரித ஸுசீலனென்றீர்; அவன் விரோதிநிரஸநசீலனேயாகிறு ... ப்ரயோஜநாந்தரங்களில் நசை அநுவர்த்திக்கையாலே ... கொள்ளுமாவென்ன; ப்ரயோஜநாந்தரபரர்க்கும்கூட தன்... ஆனருக்குக்கார்யம் செய்யும்படியான ஸுசீலன்கிடீகோள் ... என்று ஸங்கதி.

(க) தி-பள்-க0. (உ) விஷ்-டு-டு-கள. (ங) † குண்டலிதம் க்ரந்தம்.

"வானவர்" என்னவமைந்திருக்க "தம்" என்றத்தாலே அவர்கள் துரபிமாநம் தோற்றுமென்று விவக்ஷித்து வ்யாவர்த்யகதநபூர்வகம் தாத்பர்யமருளிச் செய்கிறார் (அநந்யேத்யாதி). வானவரென்று, வான்-ப்ராப்யமாகத் தோற்றுகையாலும், அதுபெறுகைக்கு ஸாதநமும் தாமே அநுஷ்டிக்க வல்லாரென்று முன்பிருக்கிற ஸ்வாதந்த்ர்யம் "தம்" என்றத்தாலும் ஸூசிதமாகையாலும், அநந்யப்ரயோஜநராய் அநந்ய ஸாதநரானவர்களை வ்யாவர்த்திக்கிறதென்று திருவுள்ளம். மாணாய் என்னாதே, "மாணுருவாய்" என்றத்தாலே, இரப்பிலே தகணைநினைமைதோற்றுமென்று அருளிச்செய்கிறார் (அவனித்யாதி). "தான் மாணுருவாய் மூவடி மாவலியைவேண்டி" என்றந்வயித்து, தானே தன்னிலே ஸர்வஸ்வாமித்வம் தோற்றியிருக்கையாலே வேண்டக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (தனக்கேத்யாதி). மாணுருவானபோது சக்கரப்படையுண்டோவென்ன; "அளந்தபோது உண்டு" என்றுப்ரமாணமருளிச்செய்கிறார் (த்ரிவிக்ரம இத்யாதி). திருவடிகளின்கீழே அடங்கும்படி அளக்கக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (ஜிதமித்யாதி). ... ... ... ... ... ... ... (௬)

மூ. — பந்தணைந்த மெல்விரலாள் சீதைக்காகிப்
பகலவன் மீதியங்காத விலங்கைவேந்தன்
அந்தமில்திண் கரம்சிரங்கள் புரண்டுவீழ
அடுகணையாலெய்து கந்தவம்மான் காண்மின்
செந்தமிழும் வடகலையும் திகழ்ந்தநாவர்
திசைமுகனேயனையவர்கள் செம்மைமிக்க
அந்தணர்த மாகுதியின் புகையார் செல்வத்
தணியழுந்தூர் நின்றுகந்த வமரர்கோவே. (௭)

| பதம். | உரை. |
|---|---|
| செம்தமிழும் | அழகிய (ஸ்வார்த்தத்தை எளிதில் ப்ரகாசிப்பிக்க வல்ல) த்ராவிடவேதமும் |
| வடகலையும் | ஸம்ஸ்க்ருத வேதமும் |
| திகழ்ந்த | விளங்காநின்ற [ளாய் |
| நாவர் | நாவையுடையவர்க |
| திசைமுகனே | ப்ரஹ்மாவோடொத்த(ப்ரபாவமுடைய) |
| அனையவர்கள் | வர்களாய், |

| பதம். | உரை. |
|---|---|
| மிக்கசெம்மை | அதிசயிதமான வைலக்ஷண்யத்தையுடையரான |
| அந்தணர்தம் | ப்ராஹ்மணருடைய |
| ஆகுதியின் | (யஜ்ஞத்தில்) ஆஹுதியிலேயுண்டான |
| புகை ஆர் | தூமம் நிறைந்திருக்கிற |
| செல்வத்தணியழுந்தூர் நின்றுகந்த அமரர்கோ, | [கிற |
| பந்து அணைந்த | பந்தோடு கூடியிருக் |

| | | | |
|---|---|---|---|
| மெல் | ம்ருதுவான [ன | திண் | பலிஷ்டமான |
| விரலாள் | விரற்களை யுடையளா | கரம் | கைகளும் |
| சீதைக்காகி | ஸீதை நிமித்தமாக, | சிரங்கள் | தலைகளும் [க |
| பகலவன் | ஸூர்யன் | புரண்டுவீழ | அறுந்துவிழும்படியா |
| மீது | மேலே | அடுகணையால் | கொல்லவல்லபாணத் |
| இயங்காத | ஸஞ்சரிக்கப்போகாத (உயர்ந்த அரணை | | தினால் |
| இலங்கை | லங்கைக்கு [யுடைய) | எய்து உகந்த | அடித்து (க்கொன்று) ஸந்தோஷித்த |
| வேந்தன் | ராஜாவான ராவணனுடைய [ணிறந்த) | அம்மான்காண் | ஸர்வேஶ்வரன் ஈடு |
| அந்தம் இல் | அவதியில்லாத (எண் | மின் | ர். (எ) |

வ்யா.—ஏழாம்பாட்டு. (பந்தணைந்த) ஸர்வேஶ்வரன் ஸந்நிதியிலும் பந்துகொண்டுபோதுபோக்க வேண்டும்படியாய், அந்த பந்து தொடவும் பொறுதபடியான விரலையுடைய பெரியபிராட்டியாரோடுண்டானஸம்ஶ்லேஷத்துக்காக பிரிவுக்கு ஹேதுபூ(ஞு)தனாய், சந்த்ராதித்யர்கள் மேலே ஸஞ்சரிக்கப்பெறுத அரணையுடைத்தாயிருக்கிற லங்கைக்கு நிர்வாஹகனான ராவணனுடைய. (அந்தமிலித்யாதி) அறுக்கவறுக்க முளைக்கையாலே அவதியின்றிக்கே யிருப்பதாய், திண்ணியதாயுமிருக்கிற தோள்களும் தலைகளும் தெறித்துப்போய் விழ, ஒரு கொலைஅம்பாலே எய்து அவனையழித்து, "விரோதிபோகப் பெற்றோம், ஆஶ்ரிதரும் குடியிருப்புப் பெற்றார்கள்" என்று அவர்களுக்குக்கடவ உகப்பைத்தானுகந்த ஸர்வேஶ்வரன்கிடீர்.

(செந்தமிழித்யாதி) (செந்தமிழும்) அர்த்தத்தை நேராகக்காட்டவல்ல தமிழும். (வடகலையும்) ஸம்ஸ்க்ருதமும், இவையடைய விளங்குகிற நாவையுடையருமாய். (திசைமுகனே யனையவர்கள்) தனித்தனியே சதுர்முகனைப்போலே ஸ்ருஷ்டிக்ஷமராயிருக்கிற ப்ராஹ்மணர்வர்த்திக்கிற. (செம்மையித்யாதி) இப்படி வைலக்ஷண்யம் விஞ்சியிருந்துள்ள ப்ராஹ்மணருடைய ஹோமதூமத்தையும் அழகிய செல்வத்தையுமுடைய அணியழுந்தூர். ... ... ... (எ)

---

அரு.—ஏழாம்பாட்டு. (பந்தணைந்தவித்யாதி) கீழ்ப்பாட்டில், ப்ரயோஜநாந்தர பரரிடத்தில் தன்னை இரப்பாளனுக்கியும் கார்யம் செய்யுமவன் என்னுகின்றீர்; இப்படி அவன் செய்யவேண்டுவா னென்னென்னில், அவன் பிராட்டியிடத்தில்அபி(ஓ)நிவிஷ்டனாய் கார்யம் செய்யுமாபோலே சேதநரெல்லாரிடத்திலும் அபிநிவிஷ்டனாயிருப்பன் கிடீரென்று உபதேசிக்கிறுரென்று ஸங்கதி.

ஸர்வேஶ்வரனுக்கு வ்யாமோஹத்தை யுண்டாக்குகைக்கு உபயுக்தமான மௌக்த்ய(ஜ)மும், மார்தவமும் ஸூசிதமாகிற தென்றருளிச்செய்கிறார் (ஸர்வேஶ்வரனித்யாதி).

“ ஆர் ” என்று பொருந்துதலாய், இவர்களுக்குப் பொருந்தினதென்றாய், அத்தால்பலிதம் (அழகிய) என்றது. ... ... ... ... (எ)

மூ. — கும்பமிகு மதவேழம் குலையக் கொம்பு
பறித்து மழவிடை யடர்த்துக் குரவைகோத்து
வம்பவிழும் மலர்க்குழலாளாய்ச் சிவைத்த
தயிர் வெண்ணெயுண்டுகந்த மாயோன் காண்மின்
செம்பவளமரகத நன்முத்தம்காட்டத்
திகழ்பூகம் கதலிபலவளம் மிக்கெங்கும்
அம்பொன்மதிள் பொழில்சூழ்ந்தழகார்செல்வத்
தணியழுந்தூர் நின்றுகந்த வமரர்கோவே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| செம்பவளம் | (பாக்குமரங்களில் பழங்கள்) சிவந்த பவழத்தையும் | புடை | பர்யந்தங்களிலே |
| | | சூழ்ந்து | சுற்றப்பட்டு |
| | | அழகு ஆர் | அழகுமிக்கிருக்கிற |
| மரகதம் | (அவற்றின் காய்கள்) மரகதப் பச்சையையும் | செல்வத்தணியழுந்தூர் நின்றுகந்த அமரர்கோ, | [யும் |
| | | மிகு கும்பம் | பெருத்தமஸ்தகத்தை |
| நல்முத்தம் | (பூக்கள்) நல்ல முத்துக்களையும் | மதம் | மதத்தையுமுடைய |
| | | வேழம் | குவலயாபீடமானது |
| காட்ட | தர்சிப்பிக்கவற்றான | குலைய | அழியும்படியாக |
| பூகம் | கமுகுகளாலே | கொம்பு | (அதின்) தந்தங்களை |
| திகழ் | விளங்காநின்றதாய், | பறித்து | பிடுங்கியும், |
| பல | அநேகமான | மழம் | இளம்பருவமான |
| கதலி | வாழைகளுடைய | விடை | எருதுகளை |
| வளம் | ஸம்ருத்தியானது | அடர்த்து | நெருக்கியும், |
| எங்கும் | எல்லாவிடங்களிலும் | குரவை | ராஸக்ரீடையிலே |
| மிக்கு | அதிசயித்திருப்பதாய், | கோத்து | (பெண்களோடு) கைகோத்தும், |
| அம்பொன் | மிகவும் ஸ்ப்ருஹணீயமான [தான | வம்பு | பரிமளமானது |
| மதிள் | ப்ராகாரத்தையுடைத் | அவிழும் | பரவாநின்ற |
| பொழில் | சோலைகளாலே | மலர் | பூக்களுடைய [ளான |
| | | குழலாள் | மயிர்முடியையுடைய |

| | | | |
|---|---|---|---|
| ஆய்ச்சி | யசோதைப்பிராட்டி | உண்டு | அமுதுசெய்தும் |
| வைத்த | சேமித்துவைத்த | உகந்த | ஸந்தோஷித்த |
| தயிர் | தயிரையும் | மாயோன்கா | ஆஸ்சர்யபூ (஭ூ)தன் |
| வெண்ணெய் | நவநீதத்தையும் | ண்மின் | கிடீர். (அ) |

வ்யா.—எட்டாம்பாட்டு. (கும்பமிகு மதவேழம்) ஆனைகளோடும் மலைகளோடும் பொருது புண்பட்ட மஸ்தகத்தையுடைத்தாய், மதமுதிதமாயிருக்கிற குவலயாபீடமானது குட்டிச்சுவர்போலே தளர்ந்துவிழும்படி அதினுடையகொம்பை அநாயாஸேந பறித்து. (மழுவிடையடர்த்து) பருவத்தால் இளைதாய், "காட்டுக்காட்டு" என்று ம்ருத்யுஸத்ருஶமாயிருக்கிற வ்ருஷபங்களேழையும் அழியச்செய்து. (குரவைகோத்து) பெண்களுடைய குரவைக்கூத்திலே தன்னையுமொருவனாக விட்டுக்கோத்து. (வம்பவிழுமித்பாதி) விரோதிவர்க்கத்தைத்தானே கைதொட்டுப்போக்கினவன். அநுகூலஸ்பர்சமுள்ள த்ரவ்யமொழியச் செல்லாமையாலே, பரிமள ப்ரசுரமான பூவையுடைத்தான குழலையுடைய யசோதைப் பிராட்டி வைத்த தயிரையும் வெண்ணெயையும் அமுதுசெய்து, அத்தாலே பெறுப்பேறு பெற்றானாக விருக்கிற ஆஸ்சர்யபூ(஭ூ)தன் கிடீர்.

(செம்பவள மரதகநன்முத்தம் காட்ட) அங்குண்டான கமுகுகளில் பாளைகள் முத்தைக்காட்ட, பசுங்காயானது மரகதத்தைக் காட்ட, பழுங்காயானது பவளத்தைக்காட்ட, ஆக இப்படி மூன்றும் ஒருகாலே கண்டநுபவிக்கலாம்படி யிருப்பதாய், வாழைகளினுடைய மிகுதியால் வந்த அழகு குறைவற்று எங்குமொக்க ஸ்ப்ருஹணீயமாய், அரணாகப்போரும்படியான மதிளாலே சூழப்பட்ட பொழிலையுடைத்தாயிருக்கிற திருவழுந்தூர். ... ... ... ... (அ)

---

அரு—எட்டாம்பாட்டு. (கும்பமித்யாதி) கீழ்ப்பாட்டில், சொன்ன பிராட்டியிடத்தில் போலே சேதநரிடத்தில் அபிநிவிஷ்டனா யிருக்கைக்கு மூலமென்னென்ன, ஆஸ்ரித கரஸ்பர்சமுள்ள த்ரவ்யத்தாலல்லது செல்லாதபடியானஸ்வபா(஭ா)வன்கிடீரென்கிறுரென்று ஸங்கதி.

கும்பத்துக்கு மிகுதி யுத்த(஡)வடுக்கனென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (ஆனையித்யாதி). (காட்டுக்காட்டு) என்று (பருவத்தால் இளைதாய்) என்று அந்வயித்துக்கொள்வது.

"பல-கதலி" என்று அந்வயம் திருவுள்ளம்பற்றி யருளிச் செய்கிறார் (வாழைகளினுடைய மிகுதியாலே) என்று ... ... ... ... (அ)

மூ. — ஊடேறு கஞ்சனொடு மல்லும் வில்லும்
ஒண்கரியுமுருள் சகடுமுடையச்செற்ற
நீடேறுபெருவலித் தோளுடையவென்றி
நிலவுபுகழ் நேமியங்கை நெடியோன்காண்மின்
சேடேறு பொழில்தழுவு மெழில்கொள்வீதித்
திருவிழவில் மணியணிந்த திண்ணைதோறும்
ஆடேறு மலர்க் குழலார் பயிலும் செல்வத்
தணியழுந்தூர் நின்றுகந்த வமரர்கோவே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சேடுஏறு | இளமையேறி(மிக்கு) இருக்கிற | கஞ்சனொடு | கம்ஸனோடுகூட |
| பொழில் | சோலைகளாலே | மல்லும் | சாணூராதிமல்லவர்க்கமும் |
| தழுவும் | சுற்றும்வ்யாப்தமாய்க்கொண்டு [ருக்கிற | வில்லும் | தநுஸ்ஸும் [மான) |
| எழில்கொள் | அழகை யுடைத்தாயி | ஒள் | அழகிய (பலிஷ்ட்ட |
| வீதி | திருவீதிகளில் | கரியும் | குவலயாபீடமும் |
| திருவிழவில் | உத்ஸவங்களிலே | உருள் | உருண்டு வாராநின்ற |
| மணி | ரத்நங்களாலே | சகடும் | சகடாஸுரனும் |
| அணிந்த | அலங்கரிக்கப்பட்ட | உடைய | நெருக்குண்ணும்படி |
| திண்ணைதோறும் | திண்ணைகளெங்கும், | செற்ற | (அவர்களை) அழித்தவனாய் |
| ஆடுஏறு | பரிமளம்ஏறி (மிக்கு) இருக்கிற | நீடுஏறு | மென்மேலும் அதிசயித்து வரா நின்ற |
| மலர் | புஷ்பங்களினாலலங்கரிக்கப்பட்ட | பெருவலி | மிக்கபலத்தையுடைய |
| | | தோள்உடைய | புஜங்களையுடையனாய் |
| | | வென்றி | ஜயமானது |
| குழலார் | மயிர்முடியையுடைய பெண்கள் | நிலவு | (எப்போதும்) வர்த்தியாநிற்கையாலுண்டான |
| பயிலும் | நெருங்கி வர்த்திக்கிற | | |
| செல்வத்தணியழுந்தூர் நின்றுகந்த அமரர் கோ, | | புகழ் | கீர்த்தியையுடைய |
| | | நேமி | திருவாழியை |
| ஊடு ஏறு | (மஞ்சத்தினுடைய) மத்யத்திலே ஏறியிருக்கிற | அம்கை | அழகிய திருக்கையிலேந்தினவனை |
| | | நெடியோன் | ஸர்வாதிகன்கிடீர் (கூ) |

வ்யா. —ஒன்பதாம்பாட்டு. (ஊடேறு கஞ்சனொடு) தன்பயத்தாலே உயரமஞ்சத்திலே போயேறி நிற்கிற கம்ஸனோடேகூட அவன் தனக்கு அரணாகநிறுத்தின மல்லவர்க்கமும், (வில்லும்) வில்விழவுக்

கென்று இட்டுவைத்த வில்லும். (ஒண்கரியும்) ஆனைவலிக்கதென்று மாதுலனுப் கண்ணநீரை விழவிட்டிருப்பதாகக் கோலின குவலயாபீடமும். (உருள்சகடும்) அஸுராவேசத்தாலே தொட்டில் பருவத்திலே மேலே வந்து விழக்கோலின சகடமும். (உடையச்செற்ற) இவற்றையெல்லா மொருகாலே அழியச் செய்தாப்போலே தோற்றுகிறதாய்த்து இவர்க்கு அநுஸந்தாநத்தில் வைசத்ய(ஶ்ய)த்தாலே. (நீடேறு பெருவலித் தோளுடையவித்யாதி) நாள்செல்ல நாள்செல்ல மிடுக்கேறிவாராநிற்பதான தோளையுடையனுப், விஜயமானது எப்போது மொக்கவர்த்தியாநின்ற புகழையுடைத்தான திருவாழியைக் கையிலேயுடைய ஸர்வர்திகன் கிடீர்.

(சேடேறு பொழில்) இளமைமிக்குவருகிற பொழிலாலே தழுவப்பட்டு, அத்தாலே எழில்மிக்கிருக்கிற திருவீதியில் திருநாள்களில் ரத்நங்களாலே அழுத்தப்பட்ட திண்ணைகள்தோறும், ஆடுகைக்காக ஏறின புஷ்பாதிகளாலே அலங்க்ருதமான குழலையுடைய ஸ்த்ரீகளுடைய நெருக்கத்தால்வந்த நிரவதிக ஸம்பத்தையுடைய திருவழுந்தூரிலே. "ஆடு" என்று - பரிமளம். பரிமளம்மிக்க மலர்க்குழல் (௯)

அநு —ஒன்பதாம்பாட்டு. (ஊடேறித்யாதி) கீழ்ப்பாட்டில் ஆஶ்ரித காஸ்பர்சமுள்ள த்ரவ்யத்தாலல்லது செல்லாதபடியான வ்யாமோஹம் சொல்லிற்று; அந்த வ்யாமோஹகார்யமான ஆஶ்ரிதவிரோதி நிரஸநம் பண்ணினவமையைப் பலபடி உபதேசித்து நேமியைப்போலேஉங்களையும் கைவிடானென்கிறுரென்று ஸங்கதி.

"ஊடு" என்று மத்த்ய(த்ய)மாய், மஞ்சத்தின் மத்த்யமாக்கி யருளிச் செய்கிறுர் (தன்னித்யாதி). ... ... ... ... ... (௯)

மூ. — பன்றியாய் மீனுகி யரியாய்பாரைப்
படைத்துக்காத்துண்டு மிழ்ந்த பரமன்றன்னை
அன்றமரர்க்கதிபதியு மயனும்சேயும்
அடிபணியவணியழுந்தூர் நின்றகோவை
கன்றிநெடுவேல் வலவனுலிநாடன்
கலிகன்றி யொலிசெய்த வின்பப்பாடல்
ஒன்றினெடு நான்குமோரைந்தும் வல்லார்
ஒலிகடல் சூழுலகாளுமும்பர்தாமே. (க௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பன்றியாய் | மஹாவராஹமாயும் | கோவை | நித்யஸூரிகளுக்கு (நிர்வாஹகனை) ஸர்வேஶ்வரன் விஷயமாக, |
| மீனாய் | மத்ஸ்யமாயும் | கன்றி | கறையையுடைத்தாய் |
| அரியாய் | நரஸிம்ஹமாயும் அவதரித்து | நெடு | தீர்க்கமாயுள்ள |
| பாரை | பூமியை | வேல் | வேலாயுதத்தை |
| படைத்து | ஸ்ருஷ்டித்து | வலவன் | பிடிக்கவல்லராய், |
| காத்து | ரக்ஷித்து | ஆலிநாடன் | திருவாலி நாட்டுக்கு நிர்வாஹகரான |
| உண்டு | (ப்ரளயத்தில்) அமுது செய்து | கலிகன்றி | ஆழ்வார் |
| உமிழ்ந்த | (ஸ்ருஷ்டி காலத்தில்) வெளிப் படுத்தின | ஒலிசெய்த | ஒலியுடைத்தாம்படி அருளிச் செய்ததாய் |
| பரமன்தன்னை | ஸர்வாதிகனை, | இன்பம் | மதுரமாய், |
| அன்று | அக்காலத்தில் | ஒன்றினொடு | ஒருபாசுரத்தோடு கூடின |
| அமரர்க்கு | தேவர்களுக்கு | நான்கும் | நாலுபாசுரங்களும் |
| அதிபதியும் | ராஜாவான இந்த்ரனும் | ஓர் ஐந்தும் | (அதன்பின் ஒரு ஐந்து பாசுரங்களும் |
| அயனும் | ப்ரஹ்மாவும் | பாடல் | (ஆகியபத்து) பாசுரங்களும் |
| சேயும் | ருத்ரனும் | வல்லார் | அப்யஸிக்க வல்லவர்கள், |
| அடிபணிய | திருவடிகளிலே விழுந்தாஶ்ரயிக்கும்படியாக, | ஒலி | கோ(ஷி)ஷியாநின்ற |
| அணி | ஸம்ஸாரத்துக்கு ஆபரணமாயுள்ள | கடல்சூழ் | ஸமுத்ரத்தாலே சூழப்பட்ட |
| அழுந்தூர் | திருவழுந்தூரில் | உலகு | லோகங்களை |
| நின்ற | உகப்புடனெழுந்தருளியிருக்கிற | ஆளும் | பரிபாலநம் பண்ணவல்லரான |
| | | உம்பர்தாம் | தேவதைகளாவர்கள் |

வ்யா. —பத்தாம்பாட்டு. (பன்றியாயித்யாதி) ஆஶ்ரிதரக்ஷணம் ஒரு தலையானால் தன்னைப்பேணுமையும் ரக்ஷிக்குமவனைத்து. (பாரையித்யாதி). பூமியை ஸ்ருஷ்டித்து, பன்றியா யித்யாதிகளாலே (காத்து) அத்தை ரக்ஷித்துத் திரியவும் ப்ரளயம்வர, வயிற்றிலேவைத்துத், திரிய வெளிநாடுகாணப் புறப்படவிட்டு, இப்படி ஸர்வவித ரக்ஷணங்களையும் பண்ணுமிடத்தில் தன்னை எண்ணினால் பின்னை ஒருவரையும் எண்ணவொண்ணாதிருக்கிற ஸர்வாதிகனை. (அன்றமரர்க்கித்யாதி) அபிமாநிகளான ப்ரஹ்மாதிகளும்வந்து

ஆஶ்ரயித்து, தந்தாமுடைய அபிமதங்கள் பெற்றுப் போம்படியாக வந்துநிற்கிற இடமாய்த்து. தேவர்களுக்கெல்லாம் நியாமகனாயிருக்கிற இந்த்ரனும், இவ்வருகுள்ளாரிற் காட்டில் விஜாதீயமான ஜந்மத்தையுடைய ப்ரஹ்மாவும், அவன்மகனான ருத்ரனும். (அடிபணிய) திருவடிகளிலே விழுந்து ஆஶ்ரயிக்க, திருவழுந்தூரிலே நின்றருளின ஸர்வாதிகனானவனை. (கன்றிநெடுவேலித்யாதி) சத்ருநிரஸநம்பண்ணிக் கறைகழற்ற அவஸரமின்றிக்கே யிருப்பதாய், (௧) "ஶஸ்த்ரஹஸ்த:-மஹாத்ரஜ:" என்னும்மாபோலே, ஒருவரால்நியமித்து ஆளவொண்ணாதபடி நெடிதாயிருந்துள்ள வேலைக்கையிலேயுடையராய் திருவாலிநாட்டையுடையராயிருந்துள்ள ஆழ்வார், ஒலியையுடைத்தாம்படி அருளிச்செய்த இனிய பாடலான இப்பத்தையும் வல்லார். "ஒன்றினொடு நான்குமோரைந்தும்" என்று தாம்சேர்த்து அநுபவித்த ப்ரகாரமிருக்கிறபடி. இவற்றை அப்யஸிக்க வல்லார்க்கு, ப்ரஹ்மாதிகளுடைய பதமுண்டாக முன்னந்தட்டில்லை. "திருமங்கையாழ்வார்தாம் பாகவத சேஷத்வமாக்குகைக்கு உடலாயிருக்கையாலே ஐஶ்வர்யத்தையும் ஆதரித்தருளினார்" என்றருளிச்செய்வர். (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

அரு. —பத்தாம்பாட்டு. (பன்றியாயித்யாதி). (தாம்சேர்த்தநுபவித்த ப்ரகாரம்) என்றது - முதற்பாட்டில் அகர்தாவதாரகந்தமான க்ஷீரார்ணவசாயியை ஒருபாட்டிலும், அங்கு நின்றும் திர்யக்காய் அவதரித்தபடியை "முன்னிவ்வுலகு" என்கிற இரண்டாம்பாட்டிலும், "சிலம்புமுதல்" என்கிற நாலாம்பாட்டிலும், "சினமேவும்" என்கிற அஞ்சாம்பாட்டிலும், "பன்றியாய்" என்கிற பத்தாம்பாட்டிலுமாக நாலுபாட்டிலும், ஒருப்ரகாரமாகவும், மற்றை அஞ்சுபாட்டிலும் கஜேந்த்ரரக்ஷணார்த்தமாகவும் வாமந ராம க்ருஷ்ண ரூபேணவும் வந்த வவற்றுக்கு ஒருசேர்த்தியும் திருவுள்ளத்திலொட்டி அநுபவித்தமை தோற்ற இங்ஙனருளிச்செய்தாரென்றபடி. ... ... ... ... ... ... ... ... ... (௧௦)

---

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஏழாம்பத்தில் எட்டாந்திருமொழி முடிந்தது.

---

(௧) ரா-யு-௧௦௦-௧௧.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# ஏழாம்பத்து ஒன்பதாந்திருமொழி

## கள்ளம்மனம் ப்ரவேசம்.

வ்யா.—கீழ்த்திருமொழியிலே, அவனே கிடிகோள் ஆஸ்ரயணீய னென்றார்; ஆனால்நீர் எங்களைச் செய்யச்சொல்லுகிற தென்னென்ன; பாஹ்யகுத்ருஷ்டிகளுடைய வார்த்தையைக்கேட்டு அநர்த்தப்பட்டுப் போகாதே ஆஸ்ரயணீயனானவன் திருவடிகளை ஆஸ்ரயித்து உஜ்ஜீவித்துப்போகப் பாருங்கோளென்கிறார். ... ... ... ... *

---

அரு.—கள்ளம் மனம்ப்ரவேசம். (நீரெங்களைச் செய்யச் சொல்லுகிற தென்னென்ன) என்றது-எங்களுக்கும் வேறுசிலர் உபதேசிக்கக்கேட்டவையுண்டாயிருக்க நீரெங்களைச் செய்யச் சொல்லுகிற தென்னென்ன என்றபடி. *

மூ. — கள்ளம்மனம் விள்ளும்வகை கருதிக்கழல் தொழுவீர்
வெள்ளம் முதுபரவைத்திரை விரியக்கரையெங்கும்
தெள்ளும் மணிதிகழும் சிறுபுலியூர்ச் சலசயனத்
துள்ளும் எனதுள்ளத்துள்ளு முறைவாரையுள்ளீரே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கள்ளம் | ஆத்மாபஹார மாகிற க்ருத்ரிமத்தையுடைய | மணி | ரத்நங்களானவை |
| மனம் | மநஸ்ஸானது | திகழும் | விளங்காநின்ற |
| விள்ளும்வகை | (அவ்வாத்மாபஹாரத்தில் நின்றும்) நீங்குபடும் ப்ரகாரத்தை | சிறுபுலியூர் | சிறுபுலியூரென்னும் திருநாமத்தையுடைத்தாய் |
| கருதி | ஆசைப்பட்டு | சலசயனத்து உள்ளும் | ஜலசாயியான எம்பெருமான் பள்ளிகொண்டிருக்கிற சலசயநமென்றும் திவ்யதேசத்திலுள்ளும் |
| கழல் | (ஸர்வேஸ்வரன்) திருவடிகளை | | |
| தொழுவீர் | ஆஸ்ரயிக்க வேண்டியிருக்கிறவர்களே! | | |
| முது | அநாதியான | | |
| பரவை | ஸமுத்ரத்திலுண்டான | எனது | என்னுடைய |
| திரை | அலைகளிலுண்டான | உள்ளத்துள்ளும் | ஹ்ருதயத்திலுள்ளும் |
| வெள்ளம் | ப்ரவாஹமானது | | |
| கரை எங்கும் | தீரங்களிலே | உறைவாரை | நித்யவாஸம்பண்ணும் ஸர்வேஸ்வரனை |
| விரிய | பரவாநிற்க, | | |
| தெள்ளும் | (அவ்வலைகளிலே) கொழிக்கப்பட்ட | உள்ளீர் | த்யாநியுங்கோள். (க) |

பவனை. (மலையை) இப்படிப்பட்ட தன்ஸ்வபாவத்தை ஒருவரால் சலிப்பிக்க அரிதாம்படியிருக்கிறவனை. (அலைநீரினை) நினைத்திட மெல்கும் ஏற்றிப்பாய்ச்சிக்கொள்ளலாம்படி யிருக்கிறவனை. (மாலை) ஆஸ்ரிதர்பக்கல் வ்யாமோஹமே வடிவாயிருக்கிறவனை. (மாமதியை) (க) "ददामि बुद्धियोगं तं- ததாமி புத்தியோகம் தம்" என்கிறபடியே தன்னைப்ராபிக்கைக்கீடான புத்தியோகத்தைக் கொடுக்குமவனை. (மறையோர் தங்கள் கண்ணினை) வேதத்தை எங்குமொக்க அதிகரித்திருப்பார்க்கு, தன்னையொழிய பதார்த்ததர்ஶநம் பண்ணவொண்ணாதபடி அவர்களுக்கு "த்ருஷ்டிபூதனுயுள்ளவனை. (கண்களாரளவும் நின்று) காணப்பெருமையால் உருவினகண்களி னுருவுதல் தீரும்படி நின்று கண்டநுபவிக்கப் பெற்றேன். ... ... ... (௯)

அ௩.—ஒன்பதாம்பாட்டு. (பண்ணினையித்யாதி) விரோதிநிவ்ருத்திக்காக ஒப்பனையை நச்சுகிறதென்; அவ்வளவன்று, நிரதிசய போக்யனுமாயிருக்குமவனென்று கொண்டு ஸர்வப்ரகார வைலக்ஷண்யத்தை அநுஸந்திக்கிறுரென்று ஸங்கதி.

"ஓர்" என்றதால் பலித்த வைலக்ஷண்யத்தை யருளிச்செய்கிறார் (இன்னுரித்யாதி). (வருத்த) என்றது-ஈடுபடுத்த என்றபடி. "பண்ணினைப்பண்ணில் நின்றதோர் பான்மையை" என்று உபமிக்கையாலே "பாலிநெய்யினை" என்று பாலில் நெய்யினை யென்று விவக்ஷிதமென்று திருவுள்ளம் பற்றி, "பண்ணினை" என்றும், "பாலி நெய்யினை" என்றுமிவற்றையுமருளிச்செய்வானென், ஸாராம்சமான பண்ணிலிசையையும் பாலில் நெய்யையுமருளிச்செய்தால் அமையாதோ என்னுமதிசங்கையைப் பரிஹரிக்கிறுர் (ஸாராம் சத்தோடித்யாதி). உத்கர்ஷாபகர்ஷங்கள் பரஸ்பரமுண்டாகிலும், எல்லாவற்றிலு முண்டான போக்யதாமாத்ரம் சொல்லவேண்டுவ தாகையாலே அங்ஙனருளிச் செய்தாரென்று கருத்து. பண் போலன்றிறே பாலும்நெய்யுமிருப்பது, அஸாராம்சமும் மிஸ்ரமாயிறே யிருப்பது, இவற்றோடே அபேத வ்யபதேசம் கூடுமோவென்ன அருளிச்செய்கிறுராகவுமாம்; இப்போது (வாசியற) என்றது. "வாசியற்றிருக்கிற" என்றாய், விவேகிக்கவொண்ணாதபடி ஒன்றாயிருக்கிற வென்றபடி. (இரண்டிலும்) பால்நெய் இரண்டிலு மென்றபடி. "மால்" என்று பெருமையாய், பேருருவுடைத்தாய் நின்ற நித்யமான விண்ணினை யென்றர்த்தமருளிச் செய்கிறுர் (த்ரிபாத்விபூதித்யாதி). "சுடர்ச்சோதி" என்றத்தால் விக்ரஹத்தினுடைய தேஜோரூபத்வம் சொன்னபடியாலே, விக்ரஹத்தில் ப்ரபை(ஒ)யைச்சொல்லிற்றாக்கியருளிச் செய்கிறுர் (விலக்ஷணத்தேஜித்யாதி).

(க) கீ-௧௦-௧௦.

"மா" என்று விசேஷித்ததுக்குக் கருத்தருளிச் செய்கிறார் (ததாமி
)த்யாதி). ... ... ... ... ... ... ... ... (கூ)

ற. — கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனென்று
காதலால் கலிகன்றியுரைசெய்த
வண்ணவொண்டமிழொன்பதோடொன்றிவை
வல்லராயுரைப்பார் மதியந்தவழ்
விண்ணில் விண்ணவராய் மகிழ்வெய்துவர்
மெய்ம்மைசொல்லில் வெண்சங்கமொன்றேந்திய
கண்ணா! நின்றனக்கும் குறிப்பாகில்
கற்கலாம் கவியின் பொருள்தானே. (கo)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

—∞∞—

| பதம். | உரை. |
|---|---|
| கண்ணமங்கையுள் | திருக்கண்ணமங்கையில் |
| கண்டுகொண்டேன்என்று | காணப்பெற்றேனென்று |
| கலிகன்றி | ஆழ்வார் |
| காதலால் | ப்ரீதியுடன் |
| உரைசெய்த | அருளிச் செய்ததாய், |
| வண்ணம் | கானத்தின் ஸ்வபாவமான இசையையுடைத்தாய், |
| ஒண்தமிழ் | அழகிய தமிழ்பாஷையிலேயுண்டான |
| ஒன்பதோடு ஒன்று | ஒன்பது பாசுரங்களோடுகூடிய ஒரு பாசுரமான [ளையும் |
| இவை | இப்பத்துப்பாசுரங்க |
| வல்லராய் | அப்யஸிக்க ஸமர்த்தராய்க்கொண்டு |
| உரைப்பார் | அநுஸந்திக்குமவர்கள் |
| மதி தவழ் | சந்த்ரன் ஸஞ்சரியாநின்ற |
| அம்விண்ணில் | அழகிய (போகப்ரசுரமான) ஸ்வர்க்கத்தில் போய் |
| விண்ணவராய் | தேவர்களாயிருந்து |
| மகிழ்வு எய்துவர் | ஸந்தோஷிப்பர்கள்; |
| மெய்ம்மை சொல்லில் | இதினுடைய உண்மையான ப(ஃ)லத்தைச்சொல்லப்புகில் |
| வெண்சங்கம் ஒன்று | வெண்மையாய் அத்விதீயமாயிருக்கிற ஸ்ரீ பாஞ்சஜந்யத்[தை |
| ஏந்திய | தரியாநின்ற |
| கண்ண | ஸர்வாதிகனே! |
| குறிப்பாகில் | திருவுள்ளமானால் |
| கவியின்பொருள் | இப்பாசுரங்களினர்த்தங்களை[யும்கூட |
| நின்றனக்கும் | ஸர்வஜ்ஞனான உனக் |
| கற்கலாம் | அப்யஸிக்கத் தகுந்ததாயிருக்கும். (கo) |

வ்யா.—பத்தாம்பாட்டு. (கண்ணமங்கையுள் கண்டு கொண்டேனென்று) ஒருதேச விசேஷத்திலேபோய் காணும் வஸ்துவை ஸம்ஸாரத்திலே திருக்கண்ணமங்கையிலே காணப்பெற்றேனென்று. (காதலால் கலிகன்றியுரைசெய்த) அபிநிவேசத்தாலே ஆழ்வாருளிச்

செய்த. (வண்ண வொண்டமிழொன்பதோடொன்றிவை) [illegible] யுடைத்தாய் அழகிதாயிருக்கிற இவைபத்தையும். (வல்லவ[illegible] பார்) அநுஸந்திப்பார்க்கு அடைவுபடச் சொல்லுகைய [illegible] அருமையாலே வல்லராய் என்கிருர்.

(மதியந்தவழ் விண்ணில் விண்ணவராய் மகிழ்வெய்துவர்) [illegible] தாலோகங்களில் போக (भोग) பூமிகளெல்லாம் புக்கு அங்கு[illegible] போக(भोग)ங்களை புஜிப்பர்கள். (மெய்மைசொல்லில்) அர்த்த[illegible] மிருந்தபடி சொல்லில். (வெண்சங்கமித்யாதி) ஐஶ்வர்ய[illegible] ஶ்ரீபாஞ்சஜந்யத்தைக் கையிலேயுடைய ஸர்வாதிகனே! உனக்கும் இதிலே ஆதரமுண்டாகில் எனக்கு சிஷ்யனுய் உனக்கும் அதிகரிக்க வேண்டும்படியாயிற்று இதினுள்ளீட்டின் கனமிருக்கிறபடி. (உ[illegible] பாகில்) திருவுள்ளமாகில். (கற்கலாம்) ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனாய்[illegible] மாந்திருந்தால் போகாது; என்னோடே அதிகரிக்கில் அற்[illegible] ஒரு வஸிஷ்டனோடே ஸாந்தீபநியோடே தாழநின்று அதிகரி[illegible] கடவ அவனுக்குத் திருமங்கையாழ்வாரோடே அதிகரிக்கை[illegible] தாழ்வோ?. (கo)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

அரு—பத்தாம்பாட்டு. (கண்ணமங்கையித்யாதி). "கண்[illegible]" என்றும் "கண்டுகொண்டேன்" என்று ஒருகால் சொன்[illegible], ஒன்பதின்கால் சொன்னத்தால் கரைபுரண்ட காதலாய் தோ[illegible] இப்படியாகைக்கு ஹேதுவென்னென்ன அருளிச்செய்[illegible] (வி[illegible] விசேஷேத்யாதி). (க) "ஸதாபஶ்யந்தி-ஸூரய" என்ன[illegible] லை, இங்கே கண்டால் காதல்விளையக்குறையில்லை யென்றுகருத்து. (அநு[illegible] ஸிப்பார்க்கு) என்றவனந்தரம் "போக்யதாதிசயத்தாலே" என்று[illegible].

நிரதிசயபோக்யபூதனுன எம்பெருமானுடைய போக்யதா[illegible] த்தை ப்ரதிபாதிக்கிற இத்திருமொழிக்கு க்ஷுத்ரமான ஸ்வர்க்காதி[illegible] ங்களை ப(ஃ)லமாகச் சொல்லக்கூடுமோ வென்னும் சங்கையிலே "மெய் மைசொல்லிலித்யாதி அருளிச்செய்கிருர்" என்று திருவுள்ளம்பற்றி[illegible] செய்கிறர் (அர்த்ததத்வமித்யாதி). (அர்த்ததத்வம்) புருஷார்த்த தத்வம். லோகத்திலிந்தஸாரத்தை அறியத்தக்காரில்லாமையாலே, எம்பெருமா னாரிய முன்னிடே இத்திருமொழியின் பொருளின் போக்ய(भोग्य)த்தை உனக்குங்கற்கும்படியிருக்குமென்கிற வழியாலே எல்லார்க்கு[illegible] நியைக்கற்கை பரமபுருஷார்த்தமென்று ப(ஃ)லம் சொல்லிற்றாயிற்று[illegible] திருவுள்ளம். ... ... ... ... ... ... ... (கo)

ஜீயர் திருவடிகளே சரணம்.

பெரியதிருமொழி ஏழாம்பத்தில் பத்தாந்திருமொழி முற்றிற்று.

---

(க) [illegible]

